# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Wednesday, the 22nd February 1961**

The House met in the Assembly Chamber, Fort St. George, at forty minutes past eight of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

MR. SPEAKER : கனம் பக்தவத்சலம் அவர்கள் சென்னையில் இல்லை. அவர்கள் பதிலளிக்கவேண்டிய கேள்விகள் நாளைக்கு எடுத்துக்கொள்ளப்படும்.

As the hon. Member who gave notice of qestion No. 303 is not in his seat, the question and answer will be printed in the proceedings.

*Morthana dam*

* 303 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) குடியாத்தம் தாலுகாவில் மோர்தானு அணை கட்டுவதற்காக பணம் ஒதுக்கப்பட்டுள்ளதா ?

(இ) எப்போது ஆரம்பிக்கப்படும் ?

THE HON. SRI P. KAKKAN : (a) No provision has been made.

(b) Does not arise.

*Conference (Highways Engineers)*

* 342 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ம் வருடம் ஆகஸ்டு மாதம் 20-ந் தேதி சென்னையில் நடந்த பெருவழித்துறை சூப்பரின்டெண்டிங் எஞ்சினீயர்கள் **(Superintending Engineers)** கூட்டத்தின் ஆலோசனைகள் சர்க்காருக்கு கிடைத்தனவா ?

(இ) அப்படியானால், அதன் விவரமென்ன ?

THE HON. SRI P. KAKKAN : (a) Yes, Sir.

(b) A copy of the proceedings of the conference has been placed in the Library of the Legislature.

[22nd February 1961

**SRI S. M. ANNAMALAI :** அந்த சிபார்சுகளின் பேரில் சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன? எந்தெந்த சிபார்சுகளை அமல் நடத்தியிருக்கிறார்கள்?

**THE HON. SRI P. KAKKAN :** சிபார்சுகள் இப்பொழுதுதான் செய்யப்பட்டு இருக்கின்றன. எந்தெந்த சிபார்சுகளை அமல் நடத்தவேண்டுமோ, அங்கே இருக்கக்கூடிய சூப்பிரண்டெண்டிங் எஞ்சினீயர், சிப் எஞ்சினீயர் ஆகியோர் அரசாங்கத்தினுடைய அப்ரூவல் வாங்கி அமல் நடத்த தக்க ஏற்பாடு செய்வார்கள்.

**SRI S. M. ANNAMALAI :** மராமத்து இலாகாவைச் சேர்ந்த நான்கு இலாக்காக்களையும் ஒன்றாக இணைக்கவேண்டுமென்று சிபார்சு செய்யப்பட்டுள்ளதா? அப்படியாயின் சர்க்கார் அதன் மீது எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன?

**THE HON. SRI P. KAKKAN :** அப்படி ஒன்றும் அங்கு முடிவு எடுக்கப்படவில்லை.

*Coastal Road*

* 357 *Q.*—**SRI S. M. ANNAMALAI :** கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ம் வருடம் ஆகஸ்டு மாதம் 23-ந் தேதியில் நட்சத்திரக் குறியிடாத கேள்வி எண் 17-க்கு அளித்த பதிலையொட்டி முத்துப்பேட்டையிலிருந்து, மைமீசல் (via) ராஜமடம் கடற்கரை பாதை அமைக்கும் விஷயமாக மத்திய சர்க்காரிடமிருந்து பதில் வந்துவிட்டதா?

(இ) அப்படியானால், அதன் விவரமென்ன?

**THE HON. SRI P. KAKKAN :** (*a*) No, Sir.

(*b*) Does not arise.

**SRI S. M. ANNAMALAI :** இந்தப் பாதையை மூன்றாவது திட்டத்தில் சேர்க்கவேண்டுமென்று சென்னை சர்க்கார் எப்பொழுது மத்திய சர்க்காருக்கு எழுதினார்கள்? அது ஏன் பரிசீலனை செய்யப்படாமல் மத்திய சர்க்காரிடமிருந்து பதில் வராமல் இருக்கிறது?

**THE HON. SRI P. KAKKAN :** மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்க வேண்டுமென்பதற்காகத்தான் ஏற்கெனவே பரிசீலனை செய்யப்பட்டு வந்திருக்கிறது. இந்த ரோடின் நீளம் கொஞ்ச நஞ்சமல்ல. 451 மைல் நீளம் இருக்கிறது. இப்பொழுது மூன்றாவது திட்டத்தில் 5 கோடி ரூபாய் வரை செலவு செய்ய உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. மத்திய அரசாங்கத்தினுடைய அங்கீகாரம் பெற்ற பிறகு அமல் நடத்தப்படும்.

22nd February 1961]

SRI S. M. ANNAMALAI : இந்தப் பாதையை மூன்ருவது திட்டத்தில் எப்படியாவது சேர்க்கவேண்டுமென்று மேலும் மேலும் மத்திய சர்க்காரை வற்புறுத்தி உடனடியாக மூன்ருவது திட்டத்தில் சேர்ப்பதற்கான நடவடிக்கையை ஏன் எடுத்துக் கொள்ளவில்லை ?

THE HON. SRI P. KAKKAN : அரசாங்கம் இதில் ரொம்பவும் அக்கரை எடுத்துக்கொண்டிருக்கிறது என்பதை அங்கத்தினர் தெரிந்து கொள்ளவேண்டும்.

SRI A. VEDARATHNAM : இது "கோஸ்டல்" ரோடாக இருக்கிற காரணத்திஞலே இதை நேஷனல் ஹைவேஸ் ஆக மாற்றவேண்டுமென்று நம்முடைய அரசாங்கம் ஏதாவது முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறதா ? அதைப்பற்றி மத்திய அரசாங்கத்திற்கு எழுதியிருக்கிருர்களா ? அப்படியாஞல் விவரம் தெரிவிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

THE HON. SRI P. KAKKAN : The Working Group on Communications had recommended the upgrading of the road from Madras to Cape Comorin (451 miles) as a National Highway at a cost of Rs. 5 crores.

SRI R. SRINIVASA IYER : இந்தக் கேள்வி முத்துப்பேட்டையிலிருந்து மைமீசல் வரையுள்ள பாதையைப் பற்றியது. தஞ்சை ஜில்லாவில் அந்த லிமிட்டுக்குள்ளே இருக்கக்கூடிய சில முக்கியமான பாலங்களைக் கட்டவேண்டியிருக்கிறதே. அந்தப் பாலங்களைக் கட்டிவிட்டால் பஸ் போக்குவரத்திற்கு சௌகரியமாக இருக்குமே. அதற்கு நம்முடைய சர்க்கார் ஏதாவது முயற்சி எடுத்திருக்கிருர்களா ?

THE HON. SRI P. KAKKAN : இப்பொழுது எங்கெல்லாம் பாலங்கள் அமைக்க வேண்டுமோ அதற்கான நடவடிக்கையை சர்க்கார் எடுத்து வருகிறது. மத்திய சர்க்கார் அங்கீகாரம் பெற்ற பிறகுதான் வேலை துரிதமாக நடைபெறுவதற்கு ஏற்பாடு செய்யப்படும்.

SRI S. M. ANNAMALAI : இந்தப் பாதையைப் போடுவதற்கு எவ்வளவு செலவாகுமென்று சர்க்கார் திட்டமிட்டிருக்கிருர்களா ?

THE HON. SRI P. KAKKAN : முன்பே சொன்னேன். ஐந்து கோடி ரூபாய் வரைக்கும் செலவாகுமென்று வொர்க்கிங் குரூப் சொல்லியிருக்கிருர்கள்.

*Industrial Society*

* 385 *Q.*—SRI P. S. CHINNADURAI : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பரமக்குடி இன்டஸ்ட்ரியல் சொசைட்டியில் அதன் பைலாவுக்கு விரோதமாக 37 பேர்களை மெம்பர்களாகச் சேர்க்கப் பட்டு, வேலை கொடுக்கப்படுவதாகவும், அதற்கு பதிலாக

[22nd February 1961

பைலாப்படி தகுதியுள்ள 30 பேர்கள் மெம்பர்களாகச் சேர்க்கப் பட்டுக்கூட இதுவரை அவர்களை அங்கிகரித்து வேலை கொடுக்கப் படவில்லை எனவும் கூறும் விண்ணப்பம் ஒன்று சர்க்காருக்கு வந்துள்ளதா ?

(இ) அப்படியானால், அதன்மீது சர்க்கார் எடுத்த நட வடிக்கை என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) No such representation as has been mentioned has been received by Government.

(*b*) Does not arise.

*House-rent allowance*

* 386 *Q.*—SRI K. VINAYAKAM (on behalf of SRI T. T. DANIEL) : Will the Hon. the Minister for Finance be pleased to state whether there is any proposal to grant house allowances to all teachers working in aided schools?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

SRI K. VINAYAKAM : Is it not a fact that teachers working in Government institutions are paid house-rent allowance? If so, how do the Government justify the invidious distinction shown to same category of teachers in aided schools?

THE HON. SRI C. SUBRAMANIAM : This question is with reference to teachers employed in aided schools. It is for the aided schools to consider programme of housing their teachers. As far as Government servants are concerned, it is the responsibility of Government.

SRI K. VINAYAKAM : Till the housing scheme is formulated for the benefit of the teachers employed in aided schools in the City of Madras and mufassal, will the Government consider the possibility of paying house-rent allowance to the teachers in aided schools?

THE HON. SRI C. SUBRAMANIAM : Just now we have given increased scales of pay to all teachers. I do not think Government would be able to consider any other scheme which would result in financial liability as far as this question is concerned.

(*House-site*) *Harijans*

* 387 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN (on behalf of SRI M. JAGANNATHAN) : Will the Hon. the Minister for Works be pleased to state the reasons for the delay in providing house-sites to the Harijans of Ganapathipet village, Tindivanam taluk, South Arcot district?

THE HON. SRI P. KAKKAN : The provision of house-sites for the Harijans of Ganapathipet village involves the wholesale shifting of the existing Harijan Colony to a better place. Patta lands selected for the purpose have to be acquired.

22nd February 1961]

The various formalities that have to be observed under the Land Acquisition Act such as the enquiry regarding the ownership of lands, value, objections, the preparation of subdivision records and the scrutiny of survey records by the District Surveyor are progressively under way.

SRI V. K. KOTHANDARAMAN : ஹரிஜனங்களுக்கு விட்டு மனைகள் வழங்குவதிலே காலதாமதம் ஏற்படுகிறது. குறிப்பாக, வசதி படைத்தவர்களோ, செல்வாக்குப் படைத்தவர்களோ அந்த இலாகா அதிகாரிகளை அனுகி, அவர்கள் மூலமாக இந்த நிலங்கள் வீட்டு மனைக்கு லாயக்கில்லை என்கிற முறையிலே எழுதுவதன் காரணமாக, வீட்டு மனை கேட்க முடியாத அளவுக்கு பல இடங்களிலே நிலைமை இருக்கிறது என்பது சர்க்காருக்குத் தெரியுமா? அப்படியானால் அதை மாற்றி அமைப்பதற்கு உத்தேசம் உண்டா?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினருக்குத் தெரிந்தால், எந்த ஊரிலே எந்த ஆபீசர் இந்த மாதிரி செய்திருக்கிறார் என்று சொன்னால், தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படும்.

*Baby-taxis*

* 390 Q.—SRI P. G. MANICKAM : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சென்னை ராஜ்யத்திலிருக்கும் எத்தனை பேபி டாக்ஸிகளுக்கு மீட்டர்கள் பொருத்தப்பட்டிருக்கின்றன?

(இ) இன்னும் எத்தனை பேபி டாக்சிகளுக்கு மீட்டர்கள் இல்லாமல் இருக்கின்றன?

(உ) மீட்டர்கள் பற்றுக்குறையை நிவர்த்திப்பதற்காக அரசாங்கத்தால் என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) 1,088.

(*b*) 219.

(*c*) No representations have been received by Government regarding non-availability of meters for baby-taxis. The question of Government taking action to remedy the situation arising out of the dearth of meters does not, therefore, arise.

SRI K. B. S. MANI : டாக்ஸி மீட்டர் பஞ்சத்தைப் போக்க என்ன ஏற்பாடு செய்திருக்கிறார்கள்? வெளிநாட்டிலிருந்து தருவிக்க ஏதாவது நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறதா?

THE HON. SRI V. RAMAIAH : என்னுடைய பதிலில், 'மீட்டர் பஞ்சம் இல்லை' என்றுதான் சொன்னேன்.

[22nd February 1961

**Sri K. VINAYAKAM** : Sir, if there is no shortage of prescribed meters to be fixed to the baby taxis like Ergo meters, what is the justification for some of the taxis being still without meters?

**The Hon. Sri V. RAMAIAH** : All taxis plying within the City of Madras are fitted with meters. There was really some difficulty one or two years ago. When we insisted on the rule that all taxis must be fitted with meters, immediately the price of the available meters shot up. Then we slightly relaxed the rule stating that the taxi meters might be fixed wherever possible and also with milo meters. It is not as though many of the taxis are plying with milo meters in the mufassal.

**Sri P. G. MANICKAM** : மீட்டர்கள் பொருத்தப்பட்ட டாக்ஸிகள் அனேகமாக நகரங்களில்தான் இருக்கின்றன. தாலூகா தலைநகரங்களிலும் சிறு நகரங்களிலும் டாக்ஸிகளெல்லாம் மீட்டர் பொருத்தப்படாமல் இருப்பதால் அங்குள்ள மக்களுக்குப் பலவிதமான இடைஞ்சல்கள் ஏற்படுகின்றன. ஆகவே, குறிப்பாக சிறு நகரங்களில் பேபி டாக்ஸிகளுக்கு மீட்டர் பொருத்தப்படவேண்டும் என்பதில் அரசாங்கம் கவனம் செலுத்துமா ?

**The Hon. Sri V. RAMAIAH** : மாகாணத்திலிருக்கும் எல்லா டாக்ஸிகளுக்கும் மீட்டர் பொருத்தப்பட வேண்டும் என்பதை நான் ஒத்துக்கொள்கிறேன். ஆனால், நான் ஆரம்பத்தில் சொன்னதுபோல், ஒரு வருஷம், ஒன்றரை வருஷத்திற்கு முன்னால் சில கஷ்டங்கள் இருந்தன. அதை நீக்கக்கூடிய முறையில் ஒரு புதிய விதியை ஏற்படுத்தினோம், டாக்ஸி மீட்டர் இல்லாவிட்டால் மைலோமீட்டர் இருந்தால் போதும் என்று. அதைத் திரும்பவும் அரசாங்கம் பரிசிலனை செய்யும்.

**Sri P. S. CHINNADURAI** : சென்னை நகரம் தவிர இதர நகரங்களில் டாக்ஸி போர்டு போடாமலேயே தனிப்பட்டவர்களுடைய வண்டிகள் டாக்ஸிகளாக ஓடிக்கொண்டு வருகின்றன. அவற்றைத் தடுக்க சர்க்கார் போதிய அக்கறை காட்டாத காரணத்தால்தான் டாக்ஸி போர்டு போட்டுள்ள கார் டிரைவர்கள் மீட்டர் வாங்கி வைக்கவும் தயங்குகிறார்களா என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri V. RAMAIAH** : எல்லா நகரங்களிலும் டாக்ஸி போர்டு உள்ள வண்டிகளைத்தான் ஓட்டவேண்டும். ஆனால், திருட்டுத்தனமாக ஓடுவதைக் கண்டுபிடிப்பதற்குக் கொஞ்சம் கஷ்டமாக இருக்கிறது. எங்கெங்கே திருட்டுத்தனமாக ஓடுகிறதோ அதைக் கண்டுபிடிக்க தக்க நடவடிக்கை அதிகாரிகள் எடுத்துக் கொள்கிறார்கள்.

**Sri R. SRINIVASA IYER** : May I know, Sir, whether any time-limit has been imposed by the Government for fixing the meters in the mufassal taxis? If not, at least hereafter will the Government fix a time-limit?

**The Hon. Sri V. RAMAIAH** : The hon. Member may put a separate question.

22nd February 1961]

SRI A. A. RASHEED : Sir, may I know whether the Government have received any complaint regarding the public being cheated because of milo meters instead of taxi meters being fixed?

THE HON. SRI V. RAMAIAH : So far I have not received any complaint.

**SRI K. B. S. MANI :** சுமார் ஆயிரம் ரூபாய்க்கு விற்றுக் கொண்டிருந்த மீட்டர்கள், தற்சமயம் மூவாயிரம் ரூபாய் விற்கக் கூடிய நிலைமை சென்னையில் வந்திருக்கிறது என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா? அம்மாதிரி விலை ஏற்றத்தைத் தடுக்க அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா?

**THE HON. SRI V. RAMAIAH :** மீட்டரினுடைய இப்போதைய விலை எனக்குத் தெரியாது. இரண்டு ஆண்டுகளுக்கு முன் எல்லா வண்டிகளுக்கும் மீட்டர் பொருத்தப்படவேண்டுமென்று அரசாங்கம் உத்தரவு போட்டதால் இங்கிருக்கும் வியாபாரிகள் திடீரென்று விலையை உயர்த்திவிட்டார்கள். ஆனால், அந்த உத்தரவைக் கொஞ்சம் தளர்த்தியதற்குப் பிறகு மீண்டும் மீட்டர் விலை குறைந்து விட்டதாகத்தான் எனக்கு இருக்கும் தகவல்.

**SRI R. KRISHNASAMI NAIDU :** சபாநாயகர் அவர்களே, மதுரை, திருச்சி, கோவை போன்ற பெரிய நகரங்களில் தவிர, சிறிய தாலூகா தலைநகரங்களில்கூட வாடகைக்கு விடும் டாக்ஸிகளில் மீட்டர் பொருத்தப்படவேண்டும் என்ற நிலைமை ஏற்பட்டால், அது அவர்களுக்குக் கட்டுபடியாகாமல் போய்விடுமே. தாலூகா தலைநகரங்களில் ஒரு சில வண்டிகள் மட்டுமே வைத்திருக்கும் காரணத்தால், வாடகைக்கு வண்டிகள் கிடைக்காத கஷ்டங்கள் ஏற்படுமே, அதற்கு என்ன செய்வது என்பதைப்பற்றி யோசனை செய்யப்படுமா?

**THE HON. SRI V. RAMAIAH :** இந்தக் கஷ்டத்தையும் மனதிலே கொண்டுதான் அரசாங்கம், சிறிய நகரங்களில் டாக்ஸிகளுக்கு மீட்டர்கள் பொருத்தவேண்டும் என்று கட்டாயப்படுத்தக்கூடிய விதியைக் கொஞ்சம் தளர்த்தியிருக்கிறது. ஆனால், அவசியப்பட்டால் இங்கும் மீட்டர் பொருத்தப்படுவதில் கஷ்டம் இருக்காது. இதைத் திரும்பவும் பரிசீலனை செய்வதற்குத் தயாராயிருக்கிறேன்.

SRI K. VINAYAKAM : Sir, in spite of the fixation of these meters to the taxis which indicate the exact charges that have to be paid by the consumers, is the Hon. the Minister aware of the fact that the taxi drivers insist upon extra consideration being paid if the taxi is required to come to places like Kodambakkam especially after night shows are over?

THE HON. SRI V. RAMAIAH : The public are expected to pay only the meter charges. But if there are any difficulties or harassment by the taxi drivers, they have to bring it to the notice of the Police authorities or transport authorities and they will investigate and look into it.

*Erode-Karur Road*

* 391 *Q.*—**SRI K. R. NALLASIVAM :** கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கோவை ஜில்லா ஈரோட்டிலிருந்து கரூர் போகும் பாட்டையில் 21/1 மைலில் வெங்கம்பூர் ரயில்வே பாலத்துக்கடியில் போகும் மேற்படி பாட்டையை 21/2-ல் ரயில்வே லயன் மேல் மாற்றி, மேற்படி பாட்டையை மாற்றும் உத்தேசம் சர்க்காருக்கு உண்டா ?

(இ) அப்படியாயின் வேலை எப்போது ஆரம்பமாகும் ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Yes, Sir.

(*b*) The work has been approved by the Government and it will be taken up for execution after the detailed estimate is technically sanctioned.

**SRI K. R. NALLASIVAM :** சுமார் எத்தனை நாட்களில் வேலை எடுத்துக்கொள்ளப்படும் ?

**THE HON. SRI P. KAKKAN :** 1961-62-ல் இந்த வேலை எடுத்துக் கொள்ளப்படும்.

***Rents (lands)***

* 392 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether this Government have received any communication from the Centre about the recommendations of the Land Reforms Committee regarding the reduction of rents of the tenants, prevention of binami transfer of lands by the landlords during 1960; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) The Panel on Land Reforms, Planning Commission, has not yet finalized its recommendations.

**SRI N. K. PALANISAMI :** மத்திய சர்க்காரிடமிருந்து இந்த சர்க்காருக்கு உச்ச வரம்பு சம்பந்தமாக நிலச் சீர்திருத்தக் குழுவினுடைய ஆலோசனைகள் வந்தனவா ? அல்லது, ஏதாவது தகவல்கள் வந்தனவா ? அதன் விவரம் என்ன ?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** இதைப்பற்றி ஆலோசிக்க நம் அரசாங்கம் சார்பாக ரெவினியூ போர்டு மெம்பர் ஒருவர் போய்க் கலந்துகொண்டார். அவர்கள் எல்லோரும் அதை அலசிப் பார்த்திருக்கிறார்கள். முடிவாக என்ன சிபார்சு செய்திருக்கிறார்கள் என்று இன்னும் தெரியவில்லை.

22nd February 1961]

SRI N. K. PALANISAMI : 1960-ம் வருஷத்தில் உச்ச வரம்பு மசோதா பிரசுரமான பிறகுதான் பினாமி ட்ரான்ஸாக்ஷன் தடை செய்யப்பட்டிருக்கிறது. ஆனால், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் அடிப்படையான கொள்கையை எடுத்துக் கொண்டாலும் சரி, நிலச் சீர்திருத்தக் குழுவினுடைய சிபார்சை எடுத்துக்கொண்டாலும் சரி, இந்தச் சர்க்கார் நிலச் சீர்திருத்த மசோதா கொண்டுவருவதற்கு முன்பாகவுள்ள பினாமி ட்ரான்ஸாக்ஷன்களைத் தடை செய்யவேண்டுமென்று ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். அப்படியிருக்க, 1958-ம் வருஷத்திலிருந்து நடந்த பினாமி ட்ரான்ஸாக்ஷன்களைத் தடை செய்ய சர்க்கார் ஏன் முயற்சி செய்ய வில்லை ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்தப் 'பேனல்' அதைப்பற்றியும் யோசனை செய்தது. அவர்களுடைய முடிவான அபிப்பிராயம் இன்னும் வரவில்லை.

SRI S. M. ANNAMALAI : நிலம் சம்பந்தமான சட்டங்கள் நம்முடைய மாநிலத்தில் இருந்தபோதிலும், அந்தச் சட்டங்கள் சரியாக அமுலாக்கப்படவில்லை என்பது சர்க்காருக்குத் தெரியுமா ? அதுபோலவே நிலத்திற்கு உச்ச வரம்பு விதித்து மசோதா வருகிறது என்ற காரணத்தால் முன்கூட்டியே நிலங்கள் பினாமி முறையில் எழுதி வைக்கப்பட்டுவிட்டனவே, அதைக் குறித்து மத்திய சர்க்கார் விசாரணைக் கமிட்டி ஏதாவது இந்த சர்க்காருக்குச் சொல்லியிருக்கிறதா ? அப்படியாயின், ஏன் இந்தச் சர்க்கார் ஒரு தனிக் கமிட்டியை நியமித்து எந்த எந்த ஆண்டுகளில் எவ்வளவு எவ்வளவு நிலங்கள் பினாமி முறையில் எழுதி வைக்கப்பட்டிருக்கின்றன என்பதைக் கண்டுபிடிக்கக் கூடாது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : நில உச்ச வரம்பு மசோதா எப்பொழுது பிரசுரமாயிற்றோ அதற்குப் பிறகு ஏதாவது பினாமி ட்ரான்ஸாக்ஷன் நடந்திருந்தால், அதை விசாரித்து நடவடிக்கை எடுக்கப்படும். அதற்கு முன்னால் ஏதாவது நடந்திருந்தால் இந்த மசோதாவுக்கும் அதற்கும் சம்பந்தம் இல்லை.

*Houses for Harijans*

* 393 *Q.*—SRI P. S. CHINNADURAI (os behalf of SRI T. S. RAMASWAMI) : Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) the number of houses built last year in each district with the Government aid for Harijans; and

(*b*) whether Harijan converts are given any aid for building houses for dwelling purposes; if not, why?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Chingleput—380;
Coimbatore—438;
Kanyakumari—100;
North Arcot—262;

South Arcot—222;
Madurai—356;
Thanjavur—290;
Tirunelveli—267;
Tiruchirappalli—303;
Salem—231;
The Nilgiris—89; and
Ramanathapuram—1,483 (including 1,188 houses under riot-relief special housing scheme).

(*b*) No, Sir, because the Government of India who aid the housing scheme have restricted their aid to Scheduled Castes as defined in the Scheduled Castes and Scheduled Tribes Lists (Amendment) Act, 1956, according to which, no person who professes a religion different from the Hindu or the Sikh religion shall be deemed to be a member of Scheduled Caste.

9-00 a.m. SRI P. S. CHINNADURAI : கனம் சபாநாயகர் அவர்களே, ஹரிஜனங்களுடைய வீட்டுத் தேவையை நினைக்கிறபோது கடந்த ஆண்டுகளில் கட்டப்பட்டிருக்கிற வீடுகளின் எண்ணிக்கை குறைவாக இல்லையா? சென்ற ஆண்டில் எல்லோருக்கும் வீட்டு மனை, வீடு கட்ட உபகரணங்கள் கொடுப்பதற்காக திட்டம் இருந்ததே, அது என்ன ஆயிற்று? அந்தத் திட்டமானது எப்போது அமுலுக்கு வரும் என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : எல்லோருக்கும் வீடு கட்டிக் கொடுக்க முடியாது. அதனால்தான் அரசாங்கமே மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இடங்கள் வாங்கிக் கொடுப்பது, அந்தச் சமூகத்திற்குப் பொதுவாக பொதுமன்றங்கள் கட்டிக்கொடுப்பது, தண்ணீர் வசதி செய்து கொடுப்பது, மயானத்திற்குப் பாதை வசதி செய்துகொடுப்பது ஆகிய வேலைகளில் கவனம் செலுத்தி வருகிறது என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

SRIMATHI PONNAMMAL : சுதந்திரத்திற்கு முன்பு சாதிக் கொடுமையால் மதம் மாறிய மற்ற ஹரிஜனங்களுக்கும் இம்மாதிரி சலுகை செய்வதற்கு அரசாங்கம் மறுபரிசிலனை செய்யுமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : நான் முன்பு சொன்னபடி 1956-ல் திருத்தப்பட்ட ஷெட்யூல் காஸ்ட், ஷெட்யூல் டிரைப்ஸ் லிஸ்டில் கண்டவர்களுக்குத்தான் சலுகை அளிக்கப்படுகிறது. அதுவும் மத்திய சர்க்கார் கொடுக்கிற மானியம் சம்பந்தப்பட்ட வரை அவர்களுக்குத்தான் உதவி செய்ய முடியுமே தவிர மற்றவர்களுக்குச் சலுகை அளிக்க வசதி இல்லை.

SRI N. R. THIAGARAJAN : "நெல் கொண்டு போம் அளவும் நில்லாய் நெடுஞ்சுவரே" என்று கம்பன் பாடியதாக ஒரு பாட்டு உண்டு. இன்று அதேபோல் "பில் கொண்டு போம்

22nd February 1961]

அளவும் நில்லாய் நெடுஞ்சுவரே" என்று இந்தக் காண்டிராக்டர்கள் வீடுகள் கட்டுகிறார்களே, இதை நன்றாய் கட்டுவதற்கு ஏற்பாடு செய்வார்களா?

THE HON. SRI P. KAKKAN: கனம் அங்கத்தினர் ஏதோ ஒன்றிரண்டு வீட்டைப் பார்த்துவிட்டுச் சொல்கிறார் என்று நினைக்கிறேன். நன்றாகக் கட்டப்பட்டு வருகிற வீடுகளை அவர் பார்த்தால் மேலும் இப்பேர்ப்பட்ட வீடுகள் கட்டிக்கொடுப்பது நல்லது என்ற முடிவுக்குத்தான் வருவார்கள்.

SRI P. G. MANICKAM: தற்போது ஒரு வீடு கட்டுவதற்கு அரசாங்கத்தால் 750 ரூபாய் மானியம் கொடுக்கப்படுகிறது. இந்தத் தொகையானது ஒரு வீடு கட்டப் போதாது. குறைந்தது ஆயிரம் ரூபாயாவது கொடுக்கவேண்டுமென்று இந்திய சர்க்காருக்குத் தெரிவித்திருந்தார்களே, அதற்குப் பதில் அவர்களிடமிருந்து வந்துவிட்டதா?

MR. SPEAKER: கனம் அங்கத்தினர் கேட்கிற கேள்வி எப்படி மூலக் கேள்வியில் இருந்து எழமுடியும்? கனம் மந்திரி பதில் சொல்வதாக இருந்தால் எனக்கு ஆட்சேபணை இல்லை.

THE HON. SRI P. KAKKAN: 550 ரூபாய் இனமாகவும், 200 ரூபாய் கடனாகவும் ஆக 750 ரூபாய் உதவிக்கொண்டிருக்கிறோம். இந்த 750 ரூபாய்க்குப் பதிலாக ஆயிரம் ரூபாய் கொடுக்கவேண்டுமென்று ஹரிஜன நலக் குழு தீர்மானம் போட்டது. அதை மத்திய சர்க்காருக்கு அனுப்பியிருக்கிறோம். அவர்களும் ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் 1961-62-ஐப் பொறுத்தவரையில் இந்தத் திட்டத்தை நிறைவேற்றப்போகிறோம்.

SRI P. S. CHINNADURAI: கனம் சபாநாயகர் அவர்களே, ஹரிஜன சமூகத்தைச் சேர்ந்தவர்கள் மிகப் பெரும்பான்மையோர் பரம ஏழைகளாக இருக்கிற நிலைமையையும், அவர்கள் எந்த மதத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தபோதிலும் அரசாங்க உதவியைப் பெறுகின்ற தகுதியை உடையவர்களாக இருக்கிறார்கள் என்பதையும் மத்திய அரசாங்கத்திற்கு இந்த அரசாங்கம் எடுத்துக் கூறி மத சார்பற்ற முறையில் சலுகை அளிக்க இந்த அரசாங்கம் முன்வருமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN: மத்திய அரசாங்கத்திற்கு ஏற்கனவே இதைப்பற்றி எடுத்துக் கூறி அவர்களும் மதம் மாறிய கிருஸ்துவர்கள் சம்பந்தமாக இந்த விதியைத் தளர்த்துவதற்கு இல்லையென்று விட்டார்கள். இனி நம் ராஜ்ய உதவியையாவது மதம் மாறிய கிருஸ்துவர்கள் என்று பாராது எல்லா ஹரிஜனங்களுக்கும் உதவுவார்களா என்று கேட்டால் பொருத்தமாக இருக்கும். நாம் எந்த எந்த வகையில் அவர்களுக்கு உதவி செய்யலாம் என்று பார்த்து ஆலோசித்துத்தான் உதவி செய்து வருகிறோம்.

[22nd February 1961

SRI M. K. SOMASUNDARAM : மதம் மாறிய ஹரிஜன கிருஸ்தவர்கள் மற்ற துறைகளில் முன்னேற்றம் அடைந்திருந் தாலும்கூட பொருளாதாரத் துறையில் இன்னமும் தாழ்ந்த நிலையிலேயே இருக்கிறார்கள் என்கிற காரணத்தினால் இந்த ஹரிஜனங்களுக்குக் கொடுக்கிற சலுகையை இவர்களுக்கும் கொடுக்க முன்வருவார்களா ?

THE HON. SRI P. KAKKAN : இப்போதுதான் கனம் அங்கத் தினருக்குப் பதில் சொன்னேன். அவர்கள் கல்வித் துறையிலும் சரி, இதர துறைகளிலும் சரி பிற்போக்காகவே இருக்கிறார்கள். கல்வித் துறையில் மற்றவர்களுக்குச் சலுகை அளிப்பது போலவே மதம் மாறிய கிருஸ்துவர்களுக்கும் உதவி அளித்து வருகிறோம். மத்திய சர்க்காரில் இருந்து கிடைக்கிற மானியத்தைப் பொறுத்த வரையிலும்தான் இந்தக் கஷ்டம் என்று சொல்ல விரும்புகிறேன்.

SRI A. R. SUBBIAH MUDALIAR : வீடு கட்டிக்கொடுப் பதற்குப் பதிலாக மனைகள் வாங்கி வினியோகம் செய்தும், அஸ்தி வாரம் போட்டும், இதர உபகரணங்கள் கொடுப்பதாகவும் ஒரு யோசனை இருந்ததே, அது எப்போது அமுலுக்கு வரும் ?

THE HON. SRI P. KAKKAN : இந்த மாதிரியாகச் செய்தால் அதிகம் பேர்களுக்கு உதவி அளிக்கலாம் என்கிற காரணத்தினால் தான் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒரு முடிவுக்கு வரலாமென்று செய்திருக்கிறது.

SRI S. LAZAR : மதம் மாறியவர்களுக்குச் சலுகை கொடுக்க வேண்டுமென்பதை இந்த அரசாங்கம் ஒப்புக்கொள்கிறதா ? அப் போது மத்திய சர்க்காருக்கு இது சம்பந்தமாக வற்புறுத்தியதா ? அவர்கள் என்ன பதில் கொடுத்தார்கள் ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினருக்குத் தெரியும், மதம் மாறிய கிருஸ்தவர்களுக்கு நாம் எவ்வளவு உதவி செய்கிறோம் என்பது. மற்றபடி தேதியை அறிய விரும்பினால் தனிக் கேள்வி போட்டால் அவருக்கு பதில் சொல்கிறேன்.

SRI GOMATHISANKARA DIKSHITAR : சேர்மாதேவி வட்டா ரத்தில் ஹரிஜனங்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுப்பதில் பல ஊழல்கள் இருக்கின்றன என்பதை அரசாங்கத்திற்குத் தெரிவித்துக்கொண்டிருந்தும் அதன்பேரில் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள் என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : எந்த ஊரில் இந்தமாதிரி ஊழல் ஏற்பட்டது என்று தெரிவித்தால் பதில் சொல்கிறேன்.

SRI J. MATHA GOWDER : நீலகிரி ஜில்லாவில் கட்டக்கூடிய வீடுகளுக்கு கொடுக்கக்கூடிய தொகை மிகவும் குறைவாக இருக் கிறதென்பதைப் பற்றி அமைச்சர்களிடத்தில் பலமுறை வற்புறுத்

22nd February 1961]

தப்பட்டு வந்திருக்கிறதே, அவர்களுக்கு அதிகத் தொகை கொடுத்து நல்ல வீடுகள் கட்ட எப்போது உதவி செய்ய முன் வருவார்கள் என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : நீலகிரி ஜில்லாவைத் தவிர இதர பகுதிகளில் வீடுகள் கட்டுவதற்கு 550 ரூபாய் மானியமும், 200 ரூபாய் கடனும் ஆக 750 ரூபாய்தான் இப்போது உதவி செய்கிறோம். ஆனால் நீலகிரி ஜில்லாவில் கட்டப்படுகிற வீடுகளுக்கு ஆயிரம் ரூபாய் இப்போதே கொடுக்கிறோம். ஆனால் அது போதாது, 1,500 ரூபாய் கொடுக்கவேண்டுமென்று நான் சென்ற போது சொன்னார்கள். இப்போதுள்ள நிலைமையில் அதைப்பற்றி பரிசிலனை செய்வதற்கில்லை.

SRI A. VEDARATHNAM : இந்து சமூகத்தில்தான் தீண்டாமை என்ற அந்த நோய் அனுஷ்டிக்கப்பட்டு வந்தது. பிற மதங்களில் அந்தக் கஷ்டம் கிடையாது. அப்படி மதம் மாறியவர்களுக்கு இந்தச் சலுகை கொடுக்க வேண்டியது அவசியம் தானா என்பதை இந்த அரசாங்கம் பரிசீலிக்குமா?

THE HON. SRI P. KAKKAN : மதம் மாறியவர்களுக்கு எந்த எந்தச் சலுகை கொடுத்தால் நல்லது என்று பரிசிலனை செய்து அந்த அந்தச் சலுகை அளிக்கப்பட்டு வருகிறது. வீடு கட்டுகிற விஷயத்தில் மத்திய சர்க்கார் கொடுக்கிற மானியத்தைப் பொறுத்தவரையில் இந்த உதவி கிடைக்காது.

SRI C. MUTHIAH : மார்ச் மாதத்திற்குள் வீடுகள் கட்ட வேண்டுமென்று உத்தரவு போட்டிருப்பதன் காரணமாக கொஞ்சம் கஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. இதனால் வேலை தாமதப்படுகிறது. வட்டார வளர்ச்சி அதிகாரியிடம் ஒரு இரண்டு மாத காலம் அதிகப்படியாக ஆனாலும் இந்தத் தவணையைக் கொடுத்து முடிக்கும்படியாக அரசாங்கம் உத்தரவு போடுவார்களா என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : வீடு கட்டுவதில் மிக்க துரிதமாக கட்டி முடிக்கவேண்டுமென்று அரசாங்கம் உத்தரவு போட்டிருக்கிறது. போன வருஷம் ஆன வசூலில் 50% செலவிடலாம் என்றும் பட்ஜெட்டு நிறைவேறியவுடனே வேலைகளை துரிதமாக ஆரம்பித்து வீடுகள் கட்டவேண்டுமென்று சொல்லியிருக்கிறோம்.

*Corporation inspection vans*

* 394 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether the Madras City Corporation Council has requested the Government for permission to use the Corporation inspection vans for conveying councillors back to their residences after the meetings are over; and

(*b*) if so, the nature of reply sent by the Government?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) & (*b*) In about January 1960, the Corporation of Madras resolved that on Council meeting days the hon. Members of the Council be conveyed back to their residences or places of work after meetings

[22nd February 1961]

were over and that the Corporation inspection vans be used for this purpose. With reference to rule 10 in Schedule V to the Madras City Municipal Act, the Resolution was sent to the Government for orders. The Government were legally advised that section 25 (*a*) of the Madras City Municipal Act prohibits a Councillor from receiving or being paid from the funds at the disposal of or under the control of the Corporation a salary or other remuneration for services rendered by him in any capacity whatsoever and the provision of free conveyance by the Corporation vans would amount to remuneration within the meaning of the above section of the Act. The Corporation was accordingly informed that the Resolution could not be acted upon; and at the same time a suggestion was commended to the Corporation to the effect that the Corporation vans might perhaps be used for the conveyance of the members on nominal payment.

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware that even now inspection vans are used by the councillors to get back to their homes and if so, will it be stopped or will the Government allow them to continue it?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : I am not aware of what the hon. Member has stated. If anything could be done under the rules, we will look into it.

SRI A. A. RASHEED : May I know whether there is any proposal with the Government to pay to the councillors for their transport?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : I have already stated that there is no provision for it.

SRI K. VINAYAKAM : Whereas the City Municipal Act clearly lays down that no conveyance charges or conveyance facilities should be given to the councillors to take them back to their houses, why did the Government use nebulous terms like "vans may be or might be or could be used" which only gives them an opportunity of using those vans?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : It might be used only on nominal payment and not free.

*Leprosy Centres*

* 395 *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI M. P. SARATHI) : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

*1960-ல் இந்த ராஜ்யத்தில் லெப்ரஸி ஸானிடோரியம், லெப்ரஸி ஸென்டர்கள் எங்கெங்கு உள்ளன ?*

THE HON. SRI M. A. MANICKAVELU : A statement [a] is placed on the table of the House.

[a] Printed as Appendix I on pages 242–243 infra.

22nd February 1961]

**SRI S. M. ANNAMALAI:** இந்த லெபரஸி சென்டர்ஸ் எந்த அடிப்படையில் ஏற்படுத்தப்படுகிறது? சர்வே செய்யப்பட்டு எந்தெந்த இடங்களில் லெப்ரஸி அதிகமாக இருக்கிறதோ அந்தந்த யிடங்களில் ஆரம்பிக்கப்படுகிறதா? அல்லது சிபார்சுகளின்மீது ஆரம்பிக்கப்படுகிறதா?

**THE HON. SRI M. A. MANICKAVELU:** நோயாளிகள் எங்கு அதிகமாக இருக்கிறார்களோ அங்கு வைக்கப்படுகிறது. அதை சிபார்சு என்று அங்கத்தினர் அவர்கள் கருதினால் அதை சிபார்சு என்று எடுத்துக் கொள்ளலாம்.

**SRI K. R. NALLASIVAM:** குஷ்டரோகிகள் எவ்வளவு பேர்கள் இருக்கிறார்கள் என்று சர்வே செய்யப்பட்டிருக்கிறதா? இல்லையானால், குஷ்டரோக நிவாரண ஆஸ்பத்திரிகள் உள்ளயிடங்களில், அந்தந்த வட்டாரங்களில் சர்வே செய்ய ஏதாவது ஏற்பாடு செய்கிறார்களா?

**THE HON. SRI M. A. MANICKAVELU:** சர்வே செய்வதற்கு இப்பொழுது பிரயத்தனம் செய்யப்படுகிறது. வாலாஜா ஸ்கீம் என்றிருக்கிறது. அதில் சர்வே எடுக்கப்படுகிறது. மற்றயிடங்களிலும் கூடுமானவரையிலும் எடுக்கிறோம். முன்பு இல்லை, இப்பொழுது சர்வேக்கு ஏற்பாடு செய்கிறார்கள்.

**SRI G. G. GURUMURTHI:** லெப்ரஸி சென்டர்ஸ் பொறுத்த வரையில் மாகாணம் பூராவும் சர்வே செய்து மேற்கொண்டு, இவ் வியாதி அதிகமாகயுள்ள இடங்களில் புதிய சென்டர்கள் ஆரம்பிக்க நடவடிக்கைகள் எடுக்கப்படுமா?

**THE HON. SRI M. A. MANICKAVELU:** மூன்றாவது திட்டத்தில் பெரிய அளவில் இந்த நோயைப் போக்க பணம் அதிகமாக ஒதுக்கப்பட்டிருக்கிறது. தக்க நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்படும்.

**SRI V. K. KOTHANDARAMAN:** இந்த தொழு நோய் ஒரு தொத்து நோயாக இருப்பதால், எல்லா சர்க்கார் ஆஸ்பத்திரிகளிலும் அனுமதித்து இதற்கு சிகிச்சை கொடுப்பதை தடுத்து அதற்காக தனியாக இருக்ககூடிய சானிட்டோரியம், ஆஸ்பத்திரி போன்றவைகள் அமைத்து சிகிச்சை கொடுக்க ஏற்பாடு செய்யப்படுமா?

**THE HON. SRI M. A. MANICKAVELU:** இதில் ஒரு மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. இது, மற்ற நோய்களைப்போல் ஒரு நோய். ஆகவே எல்லாயிடங்களிலும் சிகிச்சைக்கு வசதி ஏற்படுத்த வேண்டுமென்ற முறையிருக்கிறது. தொத்து நோய் என்றால், இது நிதானமான தொத்து நோய். சீக்கிரத்தில் தொத்தி விடுவதில்லை.

[22nd February 1961

SRI S. NAGARAJA MONEGAR : இந்த வியாதியைத் தடுப்பதற்கு, சிகிச்சை முறைகளை அனுசரிப்பதற்கு இந்த மாகாணம் பூராவும் பராமரிப்பதற்கு டைரக்டர் ஆப் மெடிக்கல் சர்விஸஸ்-ஐ தவிர தனியாக ஏதாவது அதிகாரியிருக்கிறாரா ? அப்படியானால் அவர் யார் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : ஸ்டேட் லெப்ரஸி அதிகாரி என்று ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

SRI A. VEDARATHNAM : ப்ரைவேட்டாக நடத்தப்படுகிற ஸ்தாபனங்களுக்கு அரசாங்கம் என்ன உதவி அளிக்கிறது ? இங்கு சர்வே செய்யப்பட்டதில் "என்டமிக் ஏரியா" என்று எந்தெந்த பகுதிகளை டிக்ளேர் செய்திருக்கிறார்கள் ? அதில் அரசாங்க ஸ்தாபனங்களை அல்லது ப்ரைவேட் ஸ்தாபனங்களை அதிகரிக்க அரசாங்கத்திற்கு உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : ப்ரைவேட் இன்ஸ்டிட்யூஷன்ஸ் நல்ல சேவை செய்திருக்கிறார்கள். இதற்காக அரசாங்கமும் அவ்வப்போது உதவி செய்கிறது. மத்திய அரசாங்கமும் உதவி செய்கிறது. மாகாணத்தில் ரொம்ப அதிகமாக இருக்கிற இடம் தென் ஆற்காடு ஜில்லா.

SRI K. B. S. MANI : இந்த வியாதி மிகவும் சீக்கிரமாக பரவக் கூடியது என்ற முறையிலும், அரசாங்கத்தினால் அதிகமான தொகை இதற்காக ஒதுக்கப்பட்டிருக்கிறது என்ற முறையிலும், எல்லா குஷ்டரோகிகளும் கட்டாயமாக சிகிச்சை பெறவேண்டும், என்ற முறையிலும் ஆங்காங்குள்ள போலீஸ் இலாகா அதிகாரிகள் அல்லது ஹெல்த் டிப்பார்ட்மென்ட் அதிகாரிகள் அவர்களைப் பிடித்து கட்டாயமாக சிகிச்சை செய்வதற்கான நடவடிக்கைகளை அரசாங்கம் எடுக்குமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அவர்களைப் பிடித்து கட்டாயமாக சிகிச்சை செய்வதென்றால் எல்லோரும் ஓடிப் போய் விடுவார்கள். "பெர்ஸுவேஷன்" மூலம் இதை நல்ல முறையில் செய்யலாம். இப்பொழுது நிறையப் பேர்கள் வருகிறார்கள். முன்பெல்லாம் இது பீடித்தவர்கள் பதுங்கிக் கொண்டிருந்தார்கள், வெளியே வர வெட்கப்பட்டுக் கொண்டிருந்தார்கள். இது மற்ற நோய்களைப் போன்றதுதான் என்று சொன்னதால், இப்பொழுது பகிரங்கமாக வருகிறார்கள். அதிக அளவில் இப்பொழுது சிகிச்சை செய்யப்பட்டு வருகிறது.

SRIMATHI A. S. PONNAMMAL : லெப்ரஸி இருக்கும் ஒருசில இடங்களில் செஞ்சிலுவை சங்கம் மூலம் பணம் வசூல் செய்து ஊசி போட்டுகொண்டு வருகிறார்கள். பணம் பற்றாமல் இருப்பதால் அவர்கள் அரசாங்கத்திற்கு மனு போட்டால் அவர்களுக்கு ஏதாவது மான்யம் கொடுக்க அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : மனு போட்டால் அப்பொழுது அதை கவனிக்கலாம்.

22nd February 1961]

SRI N. K. PALANISAMI : எங்கள் பகுதியில் குஷ்டரோகம் ஹரிஜனங்கள் மத்தியில் அதிகமாகயிருக்கிறது. அவர்களுக்கு தெரிவதில்லை இது குஷ்டரோகம் என்று. யார்ட்களுக்கு போனால் பரிசிலனை செய்து சிகிச்சை செய்கிறார்கள். கிராமப் பகுதிகளுக்குச் சென்று சர்வே செய்து யார் யார் இந்த வியாதி யால் பீடிக்கப்பட்டிருக்கிறார்களோ அவர்களுக்கு சிகிச்சை கொடுக்கும் முறையில் இப்பொழுது நடைமுறையில் உள்ள விதிகளை மாற்ற சர்க்கார் உத்தரவிடுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த நோயைப் பொறுத்தமட்டில் ஹரிஜன்ஸ், நான்-ஹரிஜன்ஸ் என்று அது "டிஸ்கிரிமினேட்" செய்வதில்லை. எல்லோருக்கும் இருக்கிறது. புதுத்திட்டப் பிரகாரம் இந்த குஷ்டரோகத்தை ஒழிக்க வேண்டு மென்று எல்லா நடவடிக்கைகளும் எடுத்துக்கொள்ளப்பட்டு வருகின்றன.

SRI P. G. KARUTHIRUMAN : "லூக்கோடர்மா" என்ற வியாதி இருக்கிறது. அதை குஷ்டரோகம் என்று பலர் நினைக் கிறார்கள். ஆனால் அது குஷ்டரோகம் இல்லை என்பது சர்க்காருக்குத் தெரியுமா ? குஷ்டரோகத்தை பூர்ணமாக, ட்யூபர்- கிளோசிசைப் போன்று தடுத்து விடமுடியும் என்பதும் சர்க்கா ருக்குத் தெரியுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அங்கத்தினர் அவர் களுக்கு தெரியும்போது இவையெல்லாம் சர்க்காருக்கு நன்றாகத் தெரியும்.

*T.B. Chemotherapy Project*

MR. SPEAKER : As the hon. Member, who gave notice of qestion No. 396 is not in his seat, the question and answer will be printed in the proceedings.

* 396 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the details regarding the working of Tuberculosis Chemotherapy Project in our State ; and

(*b*) the nature and type of the aid received from W.H.O. and B.M.R.C.

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) A statement[a] is placed on the table of the House.

*Grand Anicut Canal*

* 397 *Q.*—SRI R. SRINIVASA IYER : Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) whether the supply of water in the tail-end areas of the Grand Anicut Canal System in Pattukkottai and Aranthangi taluks is adequate ;

---

a Printed as Appendix II on page 243–246 infra.

[22nd February 1961

(b) whether the Government have received any representation from the public of Pattukkottai taluk that no turn system should be introduced for Grand Anicut Canal System; and

(c) if so, the action taken thereon?

THE HON. SRI P. KAKKAN : (a) Yes, Sir.

(b) The answer is in the negative.

(c) Does not arise.

SRI R. SRINIVASA IYER : சென்ற வருடம் மேட்டூர் தேக்கத்தில் தண்ணீர் குறைவாகயிருக்கும்போது கடைமடையில் பாசனத்திற்கு தண்ணீரே வரவில்லை. செப்டம்பர், அக்டோபர் மாதங்களில்தான் வருகிறது என்று கலெக்டரே பார்த்து சர்க்காருக்கு ரிப்போர்ட் செய்திருப்பதாகத் தெரிகிறது. கடைமடைப் பிராந்தியங்களில் உள்ள நிலங்களுக்கு முன்கூட்டியே தண்ணீரைத் திறந்துவிட்டு குளங்கள் நிரம்பிய பிறகு மற்றவைகளுக்கு பின்னால் விட சர்க்கார் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI P. KAKKAN : அங்குள்ள ஆயக்கட்டுதாரர்களுக்கு ஒத்தாசை செய்ய அரசாங்கம் தண்ணீர் கொடுத்து உதவி செய்ய கேட்டுக் கொண்டிருக்கிறோம். இடையிடையே டெம்பரரியாக வைத்த பைப்களை "ரிமூவ்" செய்து சிறிய பைப் வைத்துக் கொடுக்க அனுமதிக்கிறோம். கடைகோடியில் தண்ணீர் போக ஏற்பாடு செய்யவேண்டுமென்று சொன்னதற்காக வேண்டியது செய்து கொண்டிருக்கிறோம். அங்கத்தினர் சொன்ன விஷயம் கவனிக்கப்படும்.

### *Major Panchayats (Madurai)*

* 398 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லாவுக்குறிய இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் உள்ளபடி மேஜர் பஞ்சாயத்து நகரங்களில் எங்கெங்கு பஞ்சாயத்து உத்தியோகஸ்தர்களுக்கு வீடுகள் கட்டப் பட்டன ?

(இ) டோபிகானா, பாக்ஸ் ஸ்டால் முதலியன எங்காவது கட்டப்பட்டதா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (a) No quarters have been constructed for the Panchayat Officers in the Major Panchayats in Madurai district under the Second Five-Year Plan.

(b) No, Sir.

22nd February 1961]

SRI N. R. THIAGARAJAN : டோபிகாஞ, பாக்ஸ் ஸ்டால் முதலியன கட்டுவதை மூன்ருவது திட்டத்திலாவது சேர்த்துக் கொள்ளப்படுமா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : இதை கைத் தொழில்-தொழிலாளர்-கூட்டுறவு இலாகாதான் கட்டிக்கொடுக் கிறது. ஆகவே அதன் வழியாக இந்த கேள்வியை கேட்கலாம்.

*Kovilpatti Panchayat*

* 399 Q.—SRI V. SUBBIAH : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

கோவில்பட்டி பெரிய பஞ்சாயத்தை நகராட்சி மன்றமாக மாற்றும் உத்தேசமுண்டா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Yes, Sir. The matter is under consideration.

SRI V. SUBBIAH : ஸார், இந்த கோவில்பட்டி பஞ்சாயத்தில் குறிப்பாக 40 ஆயிரம் ஜனத்தொகையும் 2 லட்சம் ரூபாய் வருமானமும் இருக்கிறது. பஞ்சாயத்து சட்டப்படி 20 ஆயிரம் ஜனத்தொகையும் 1 லட்சம் ரூபாய் வருமானமும் இருந் தால் முனிசிபாலிட்டியாக மாற்றலாம் என்று சொல்லப்பட்டிருக் கிறது. ஆனல் அது எட்டளவில்தான் இருப்பதாக தெரிகிறது. அந்த பஞ்சாயத்தை முனிசிபாலிட்டியாக மாற்றவேண்டும் என்று கோரியிருந்தும் இதுவரை நடவடிக்கை எடுக்காமல் இருப் பதற்கு காரணம் என்ன ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : அதை நகர சபையாக மாற்றவேண்டும் என்பதற்காகத்தான் பரிசிலனை செய்யப்பட்டு வருகிறது.

*Panchayat President (Pirandiyangarai)*

* 400 Q.—SRI A. VEDARATHNAM : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) திருத்துறைப்பூண்டி தாலுகா பிராந்தியக்கரையில் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பஞ்சாயத்து தலைவரிடம் பழைய தற்காலிகத் தலைவர் சார்ஜ் கொடுக்க மறுப்பதாக சர்க்காருக்குப் புகார் வந்திருக்கிறதா ?

(இ) அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளப் பட்டிருக்கிறது ?

(உ) தலைவர் தேர்தல் எப்போது நடந்தது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) Yes, Sir.

[22nd February 1961

(*b*) The Divisional Panchayat Officer, Mannargudi has been asked by the Collector of Thanjavur to see that the ex-temporary President of the Piranthiangarai Panchayat hands over charge at once to the new President, taking police help if necessary.

(*c*) The election of the President of the Panchayat was completed on 2nd February 1960.

**SRI A. VEDARATHNAM:** ஸார், இந்த பஞ்சாயத்து போர்டு தலைவர்களில் பலர் தேர்தலுக்கு நின்று தோற்றால் புதிதாக வருகின்ற பஞ்சாயத்துத் தலைவர்களிடம் சார்ஜ் கொடுக்க மறுத்து விடுகிறார்கள். அப்படியில்லாமல் உடனடியாக சார்ஜ் பெறுகின்ற முறையில், பஞ்சாயத்துத் தலைவர் பதவியை விட்ட பிறகுதான் தேர்தலுக்கு நிற்க வேண்டுமென்று விதி செய்தால் கஷ்டம் இராது அல்லவா? இதைப்பற்றி அரசாங்கம் பரிசீலனை செய்யுமா?

**THE HON. SRI C. SUBRAMANIAM:** இது தஞ்சாவூர் பண்பாகத்தான் இருக்கிறது. ஒரு இடத்தில் இந்த வியாதி இருக்கிறது என்பதற்காக விதிகளையே திருத்தவேண்டும் என்று சொல்வது சரியல்ல என்று நினைக்கிறேன்.

*Pre-extension C.D. Blocks*

* 401 *Q.*—**SRI S. M. ANNAMALAI:** கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

*1960-ல்* அக்டோபரில் எந்தெந்த இடங்களில் Pre-extension C.D. Blocks ஆரம்பிக்கப்பட்டன?

THE HON. SRI C. SUBRAMANIAM: A list[a] is placed on the table of the House.

**SRI S. M. ANNAMALAI:** ஸார், பிளாக்குகளை பொறுக்கும் போது டிஸ்ட்ரிக்ட் டெவலப்மென்ட் கௌன்சில் சிபாரிசு செய்தவைகளை கவனிக்காமல் வேறு பிளாக்குகளை எடுத்துக்கொள்ளுவதற்கு சர்க்கார் என்ன காரணம் கூறுகிறார்கள்?

**THE HON. SRI C. SUBRAMANIAM:** சில இடங்களில் கனம் அங்கத்தினர் போன்றவர்களை சமாதானப்படுத்துவதற்கு அங்கே ஒப்புகொள்ளப்படுகிறது. அதை அனுசரித்து தீர்மானமும் செய்யப்படுகிறது. ஆனால் அதில் எது நியாயமாக இருக்கிறது என்பதைப் பார்த்து அதன்படி நடவடிக்கை எடுக்கப்படுகிறது.

*Iron deposits*

* 402 *Q.*—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether any iron deposits have been found in the Ramanathapuram district; and

---

[a] **Printed as Appendix III on page 246 infra.**

22nd February 1961]

(*b*) if so, the steps taken by the Government to exploit the same?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) An investigation of the areas of the Ramanathapuram district has shown that there are no occurrences of iron ore deposits of economic importance.

(*b*) Does not arise.

*Allotment of Houses*

* 403 *Q.*—SRI M. JAGANNATHAN (on behalf of SRI T. S. RAMASWAMI) : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) the number of Government officers who have applied for houses to the Rent Controller during this financial year; and

(*b*) how many of them have been allotted houses?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) During the period from 1st April to 31st December 1960, 3,395 Government servants applied to the Accommodation Controller, Madras, for allotment of houses.

(*b*) 627 of them have been allotted houses.

SRI A. A. RASHEED : Is it a fact that officers who are living in allotted houses have applied for bigger houses?

THE HON. SRI V. RAMAIAH : Officers who are allotted houses go and occupy them. But as soon as they find better houses available, they naturally apply.

SRI P. G. MANICKAM : ஸார், சென்னை நகரை தவிர்த்து மற்ற ஜில்லா தலைநகரங்களில் இருக்கும் அநேக அதிகாரிகள் வீடு கிடைக்காமல் கஷ்டப்படுகிறார்கள். அதைப்பற்றி அரசாங்கத்திற்கு ஏதாவது புகார் அனுப்பப்பட்டிருக்கிறதா, அப்படியாயின் முக்கியமான நகரங்களில் அவர்களுக்கு வீடுகள் கிடைப்பதற்கு அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது?

THE HON. SRI V. RAMAIAH : நமது மாகாணத்தில் எல்லா ஜில்லா தலைநகரங்களிலும் இந்த சட்டம் அமுலில் இருக்கிறது. இது தவிர அங்கங்கே இருக்கின்ற பெரிய முக்கியமான நகரங்களிலும் இந்த வாடகைச்சட்டம் அமுலில் இருக்கிறது. இந்தச் சட்டத்தின்கீழ் வீடுகள் தேவைப்படுகிற அதிகாரிகளுக்கு கொடுத்துக்கொண்டிருக்கிறார்கள்.

*Leather Industry*

* 404 *Q.*—SRI A. A. RASHEED AND SRI V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Industries be pleased to state the action taken to overcome the present slump in leather industry?

THE HON. SRI R. VENKATARAMAN : There have been marked price fluctuations in the leather industry. Peak prices were last reached during January-February 1960. A temporary fall in

[22nd February 1961

the demand from foreign countries resulted in a decline of about 15—25 per cent from the peak price. Of late the demand for our leather from abroad has been rising though very slowly. There cannot therefore be said to be a slump in the leather industry.

SRI A. A. RASHEED : May I know whether Government have any information regarding total loss suffered by the State during this slump in 1960?

THE HON. SRI R. VENKATARAMAN : Our information is there is no slump.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், அந்நிய நாட்டு செலாவணியைத் தரக்கூடிய ஒரு தொழில், தோல் பதனிடும் தொழில். இந்தத் தொழிலில் உற்பத்தியாகக்கூடிய தோல்களை இன்றைக்கு லண்டனில் கொண்டு போய் விற்பனை செய்வதற்குப் பதிலாக மத்திய சர்க்காருடைய உதவியைக்கொண்டு நமது சர்க்காரே கொள்முதல் செய்து வெளிநாடுகளுக்கு அனுப்பி விற்பனை செய்வதற்கு உத்தேசமுண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் அவர்களுடைய ஆலோசனை பரிசீலிக்கப்பட்டிருக்கிறது. லண்டனில் ஆக்ஷன் நடத்தினால்தான் பல நாடுகள் கலந்து கொள்ளும் ; அதன் காரணமாக விலையும் நன்றாக இருக்கும் என்று ஒரு திடமான அபிப்பிராயம் சொல்லப்படுகிறது. இதைப்பற்றி முடிவு இன்னும் எடுக்கப்படவில்லை.

SRI A. A. RASHEED : Will the Government come forward to give financial assistance whenever there is depression in the market so that the goods might not be sold at a lower price resulting in loss of foreign exchange?

THE HON. SRI R. VENKATARAMAN : The question is far too general for a definite answer.

SRI M. KALYANASUNDARAM : ஸார், லண்டனில் ஏலம் இருந்தால்தான் விலை நன்றாக இருக்கும் என்று கூறுவது சரியல்ல. பல நாடுகள் லண்டன் ஏலத்தில் கலந்து கொள்வதில்லை. அப்பேர்ப்பட்ட நாடுகளாக இருக்கின்ற கிழக்கு ஐரோப்பிய நாடுகள், சோவியத் யூனியன் போன்ற நாடுகளில் நாம் தயார் செய்கின்ற தோல்களும் அது சம்பந்தப்பட்ட சாமான்களும் நல்ல விற்பனையாகின்றன. ஆகவே அந்த நாடுகளுக்கு அனுப்ப சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : கிழக்கு ஐரோப்பிய நாடுகளுடன் நாம் தனியாக எக்ரிமென்ட் செய்திருக்கிறோம். எல்லா எக்ரிமென்ட்களிலும் ஈஸ்ட் இந்தியா டான்ட் ஸ்கின்ஸ் மாற்றுப் பண்டமாக சேர்க்கப்பட்டிருக்கிறது.

SRI T. T. DANIEL : May I know the reasons for fall in demand of our leather articles in foreign countries?

THE HON. SRI R. VENKATARAMAN : It is all market fluctuations; supply and demand varies.

22nd February 1961]

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware of the fact that an auction has been started in West Germany to sell East India tanned goat, sheep skins?

(No answer.)

SRI M. KALYANASUNDARAM : கிழக்கு ஐரோப்பிய நாடுகளுடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தின்படி இன்று அபிவிருத்தி அடைந்திருக்கிறதா ?

THE HON SRI R. VENKATARAMAN : These fiugres will be available only with the Government of India.

*Industrial Colony, Tunnery*

* 405 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கிழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தோல் தொழிலுக்கு மட்டும் தனியாக கைத்தொழில் பேட்டை ஏற்படுத்துவதுபற்றி அரசாங்கத்தாரால் பரிசிலனை நடத்தப்பட்டு வருகிறதா ?

(இ) அப்படியானால், அதன் விவரங்கள் யாவை ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Yes, Sir.

(*b*) This Government propose to establish an Industrial Estate exclusively for leather goods and footwear at Perambur at an estimated cost of Rs. 11,54,200 non-recurring and Rs. 30,730 recurring. The intention is to commence work in 1961-62.

SRI S. NAGARAJA MONEGAR : ஸார், இதை பெரம்பூரில் ஸ்தாபிப்பதற்கான காரணம் என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : அதன் சுற்றுப்புரத்தில் அநேக "டர்னரீஸ்" இருக்கின்றன. அதனால்தான் இங்கு ஏற்படுத்தலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

MR. SPEAKER : இப்போது 9½ மணியாகிவிட்டது, இன்னும் ஐந்து நிமிடங்களில் பாக்கியுள்ள கேள்விகளையும் முடித்து விடலாம். 9-30 p.m.

*American Tourists*

* 406 *Q.*—SRI M. KALYANASUNDARAM (on behalf of SRI K. SATTANATHA KARAYALAR) : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether any American Tourists' Agency toured our State during October, November 1960;

(*b*) if so, the places they visited;

(*c*) whether they had any discussions with our State Officials; and

[22nd February 1961

(*d*) if so, the details thereof?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Seven members of the Travel trade from the United States toured the State in October-November 1960.

(*b*) The Nilgiris, Madurai, Thanjavur, Grand Anicut, Tiruchirappalli, Madras, Mahabalipuram and Kancheepuram.

(*c*) No, Sir.

(*d*) Does not arise.

*Development of Tamil*

*407 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தமிழ் மொழி வளர்ச்சிக்காக நமது ராஜ்யத்தில் என்ன முயற்சிகள் நடைபெறுகின்றன ?

(இ) ஆங்கில, உருது முதலிய பிறமொழிச் சொற்களுக்கு தமிழ் வார்த்தைகள் கண்டுபிடிக்கப்படுகின்றனவா ?

(உ) இதுவரை நடைபெற்ற வேலை என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ), (இ) *and* (உ) The Progress Report [a] of the College Tamil Committee which contains all the details is placed on the table of the House.

*Medical Course*

*408 *Q.*—SRI N. R. THIAGARAJAN : ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

வைத்திய இலாகாவிலிருந்து வைத்தியக் கல்வியைப் பிரித்து கல்வி இலாகாவுடன் இணைக்கும் உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.

*Water cess*

*409 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நிலத்திற்கு தண்ணீர் தீர்வையை அதிகப்படுத்துவது குறித்து மத்திய சர்க்கார் மாநில சர்க்காரின் ஆலோசனையை கேட்டார்களா ?

(இ) அப்படியாயின், மாநில சர்க்கார் அனுப்பிய பதில் என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) Yes, Sir.

(இ) The matter is still consideration of the Government.

---

[a] Printed as Appendix IV on pages 246–304 infra.

22nd February 1961]

SRI S. M. ANNAMALAI : ஸார், இப்போது இருக்கின்ற வரிகளே தாங்க முடியாத அளவுக்கு மக்கள் தவித்துக்கொண்டிருக்கிறார்கள். அப்படியிருக்கும்போது மேலும் தண்ணீர் வரியை உயர்த்தினால் சாதாரண விவசாயிகள் இன்னும் பாதிக்கப்பட மாட்டார்களா ? ஆகையால் இதை கைவிடுவதற்கு அரசாங்கம் பரிசீலனை செய்யுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : மத்திய அரசாங்கத்தினுடைய தகவலிலிருந்து புதிய பிராஜக்ட்டுகளிலுள்ளவைகளுக்கும், பழைய பிராஜக்ட்டுகளிலுள்ளவைகளுக்கும் மிகவும் வித்தியாசம் இருக்கிறது. ஆகவே இதைப் பற்றி பரிசீலனை செய்துதான் முடிவு எடுக்கவேண்டும்.

MR. SPEAKER : Questions are over.

[NOTE—An asterisk (*) at the Commencement of a speech indicates revision by the Member.]

## II.—CALLING ATTENTION TO THE NEED FOR RELIEF TO HARIJANS IN SIRKALI.

MR. SPEAKER : I have received a notice from Sri C. Muthiah under rule 41 of the Assembly Rules. The hon. Member will now call the attention of the Minister.

SRI C. MUTHIAH : கனம் சபாநாயகர் அவர்களே, சென்ற ஐப்பசி மாதம் பூராவும் சீர்காழி தாலுகாவில் 62 அங்குலம் மழை பெய்ததின் காரணமாக பல வீடுகள் சேதம் அடைந்து விட்டன. சீர்காழி தாலுகாவினுடைய. . . .

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் போன வாரம் சட்ட சபைக்கு வரவில்லை போல் இருக்கிறது. 41-வது விதியின்கீழ் கனம் அங்கத்தினர் பிரசங்கம் செய்ய முடியாது. கொடுத்திருக்கக்கூடிய நோட்டீஸைப் படிக்க வேண்டியது. அதைப் படித்தவுடன் கனம் அமைச்சர் பதில் கொடுப்பார்.

## III. SITTINGS OF THE HOUSE.

SRI M. KALYANASUNDARAM : Rule 20 of the Madras Legislative Assembly Rules reads as follows :—

"20. Sittings of the Assembly shall, unless the Speaker otherwise directs, ordinarily commence at 8–30 a.m. and conclude at 1-30 p.m.".

To-day the Assembly could not meet at 8–30 a.m. and the commencement of the meeting was delayed by ten minutes. The Hon. Speaker did not direct that the Assembly should meet only at 8–45 a.m. The reason was there was no quarum. The Hon. the Leader of the House did not take efforts to secure quorum at 8-30 a.m. In this connection I wish to bring to your notice . .

[22nd February 1961

6 Are there any topics—

(*a*) Which are required for B.A. standard but are not covered by the script or book.

(*b*) Which are inadequately covered.

7 What additional topics would you like to be included and what topics would you like to be omitted?

8 Which are the topics you would like to be re-written?

9 Could you suggest references for rewriting the topics if any.

10 Are there errors of theory or of facts which should be corrected?

Please point them out. Kindly indicate where the correct information can be had.

11 Are you satisfied with Tamil terminology; Please give suggestions if any.

12 Is the language readable? Kindly point out the passages which need rewriting to improve the readability.

13 If more than one script have been sent for evaluation, which would you prefer for the award of prize? Please give reasons for the preference.

14 Would you be willing to give continuous guidance to the author if he is required to rewrite until he completes the work?

15 If only one script is given for evaluation please state whether you consider that worthy of publication and award of prize?

24. The next major problem facing the Committee was the selection of staff (Professors, Assistant Professors, Lecturers, Assistant Lecturers and Tutors) to conduct the Tamil medium courses. The Committee, after examining all the implications involved, decided that it would be better to conduct an Orientation Course for training the existing incumbents to teach their subjects in Tamil, so that, the possibility of retrenchment of staff may be avoided. The Committee accordingly prepared a scheme of Orientation Course and the scheme was approved by the Government in their G.O. Ms. No. 917, Education, dated 5th May 1960. The members of the College Tamil Committee were ordered to conduct the Course in the Government Arts College, Coimbatore, which is the Pilot College.

22nd February 1961]

25. The scheme of the Orientation Course in Tamil and the orders of the Government are reproduced below :—

# தமிழைக் கல்லூரிக் கல்விமொழியாக்கும் திட்டம்

**விரிவுரையாளர்களுக்குப் புதுமுகப் பயிற்சி.**
**(கல்லூரித் தமிழ்க் குழு 15–4–1960-ல் வகுத்தது.)**

**I. புதுமுகப் பயிற்சி வேண்டுமா ?**

1. தமிழிலே பல்வேறு பாடங்களை நடத்தவிருக்கும் ஆசிரியர்களுக்குச் சிறப்பான தமிழ்ப் பயிற்சி தருவது இன்றியமையாதது என்று கல்லூரித் தமிழ்க் குழு கருதுகிறது. அவ்வாறு கருதுவதற்கு உரிய விளக்கம் வருமாறு.

2. முன் ஒரு தடவை இரண்டு கல்லூரிகளில் தமிழைக் கல்லூரிக் கல்விமொழியாக ஆக்கினார்கள்; ஆனால் விரைவில் அந்தத் திட்டம் கைவிடப்பட்டது. திட்டம் கைவிடப்பட்டதற்குப் பலவகையான காரணங்களும் விளக்கங்களும் தருகின்றனர். போதனை மொழியை மாற்றுவதில் எழக்கூடிய சிக்கல்களைத் தெளிவாகப் புரிந்துகொள்ளாதது ஒரு காரணமாக இருக்கலாம். அவரவர் பாடங்களுக்குரிய தமிழ்க்கலைச் சொற்கள் பற்றிய பயிற்சி ஆசிரியர்களுக்கு அப்பொழுது தரப்படவில்லை. ஆகையால், தமிழில் கற்பிக்கும்போது மாணவர்களைக் கவரமுடியவில்லைபோலும். மேலும், ஆங்கிலத்திற்குப் பதில் தமிழைப் பயன்படுத்துமுன், தமிழில் உள்ள கலைச் சொற்களில் வளமுண்டு என்பதை அவர்கள் அறியாமலிருந்திருக்கலாம். முன்னே அவசரப்பட்டுத் திட்டத்தைக் கைவிட்டதாகத் தோன்றுகிறது. அதுபோல மீண்டும் நிகழக்கூடாது என்பது கல்லூரித் தமிழ்க் குழுவின் முடிவாகும். இந்தச் சிக்கல்களை எண்ணிப் பார்த்துத்தான், 1960-ல் இப்போது மேற்கொள்ளவிருக்கும் திட்டத்தில் குறைகளோ, தோல்வியோ ஏற்படாமலிருக்க வேண்டிய நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன. கலைச் சொற்கள், வேண்டிய நூல்கள் ஆகியவற்றின் தயாரிப்பில் கவனம் செலுத்துவதோடு ஆசிரியர்களைத் தயார் செய்வதிலும் கவனம் செலுத்தவேண்டும் என்று குழு முடிவு செய்துள்ளது. இதுபோன்ற முக்கியமான திட்டத்திற்கு இத்தகைய எச்சரிக்கையும் தயாரிப்பும் கட்டாயம் வேண்டும் என்பதில் ஐயமில்லை.

3. ஆசிரியர்கள் பலரும் ஏற்கனவே அவரவர் பாடங்களை ஆங்கிலத்திலேயே கற்பித்துவந்துள்ளார்கள். தமிழிலே கற்பிக்க முனையும்போது சிரமப்படுவது இயற்கை. இந்தச் சிரமத்தைத் தவிர்க்கவேண்டுமாயின், ஏற்கனவே விரிவுரையாற்றிப் பழகிய ஆங்கில மொழி நடையிலிருந்து, தமிழ் மரபுக்குப் பொருத்தமான தமிழ் மொழி நடைக்கு மாறவேண்டும். அத்தகைய மாற்றத்துக்குப் பயிற்சி வேண்டியது அவசியம்.

[22nd February 1961

4. புதுமுகப் பயிற்சியின்போது கலைச் சொற்களிலே நல்ல பழக்கமும், இப்போதுள்ள தமிழ்ப் புத்தகங்களின் அறிமுகமும் ஏற்படும். மேலும், இந்தப் பயிற்சியின்போது தங்கள் பாடங்களுக்கு வேண்டிய சில குறிப்புகளையும் தயார் செய்துகொள்ள முடியும்.

5. தற்காலத்து மாணவர்கள் தமிழிலே தங்கள் கருத்தை வெளிப்படுத்தும் திறமையிலே சிறந்து விளங்குகின்றார்கள். எனவே, அவர்களுக்குப் பாடம் நடத்தும் ஆசிரியர்கள் அவர்களினும் மிகுந்த திறமையுடையவர்கள் என்பதைப் புலப்படுத்தும் நிலை ஏற்படவேண்டும். எனவே, புதுமுகப் பயிற்சிபெற வரும் ஆசிரியர்களுக்குத் தமிழில் விரிவுரையாற்றும் துறையில் நன்கு பயிற்சி தரவேண்டும். இவ்வாறு பயிற்சி தருவதன்மூலம், தமிழில் பாடம் நடத்தும்போதும் வகுப்பைச் செம்மையாக நடத்தமுடியும் என்ற தன்னம்பிக்கையை ஆசிரியர்கள் பெற முடியும்.

## II. புதுமுகப் பயிற்சியின் அமைப்பு.

1. தமிழ் பயிற்சிமொழியாக அமைய முடியுமா?

தமிழிலே பாடம் நடத்தப்புகுமுன், ஆசிரியர்களுக்குத் தமிழின் தகுதிபற்றியும், திறன்பற்றியும் தெளிவு இருக்கவேண்டும். "தமிழிலே கல்லூரிப் பாடங்களைச் சொல்லிக் கொடுக்க முடியும். அந்த ஆற்றல் தமிழ்மொழிக்கு உண்டு" என்ற நம்பிக்கை ஆசிரியர்களுக்கு இருந்தால்தான், பின்னே மற்றவர்கள் தடையெழுப்ப நேர்ந்தால் விடை சொல்ல முடியும். எனவே, புதுமுகப் பயிற்சியின்போது போதனைக் கருவியாகப் பயன் படுவதற்குத் தமிழ் தகுதியுடையதுதானா என்பதுபற்றி ஒளிவு மறைவு இல்லாத முறையில் விவாதிக்க வேண்டும். சகல கலைகளையும் தெரிவிக்கும் ஆற்றல் தமிழ்மொழிக்குண்டு என்பதனைக் காட்டுவது அவசியமாகும். தமிழைப் பயிற்சி மொழியாக்கவேண்டிய அவசியத்தையும், அதிலுள்ள சிக்கல்களையும் அறிவதுடன், அவற்றை நீக்குவதற்கான வழிகளையும் தெரிந்து கொள்ளவேண்டும்.

2. தமிழ்த்திறன் விரிவுரைகள்

அந்தந்தப் பாடத் துறைகளிலும் தமிழிலும் ஒருங்கே நல்ல பயிற்சிபெற்ற சில கல்வி நிபுணர்களைப் புதுமுகப் பயிற்சி நடக்கும்போது வரவழைத்துத் தமிழிலே மாதிரி விரிவுரைகள் ஆற்றச் சொல்லலாம். தற்காலத்துக் கருத்துக்கள் எல்லாவற்றையுமே தமிழிலே நடத்தமுடியும் என்பதையும், தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக்க வேண்டிய அவசியத்தையும் இத்தகைய விரிவுரைகள் மூலமாகக் காட்டவேண்டும். இந்த மாதிரி விரிவுரைகளின்போது சில கலைச்சொற்களை அப்படியே சொற்பெயர்ப்பாக (transliteration அவசியமானால் அமைத்துக்கொள்ளவேண்டும். இவ்விரிவுரைகள் தமிழ்வழிக் கலைக் கல்வித்திறன் விரிவுரைகளாக அமையும்.

3. மொழியின் அமைப்புப்பற்றிய விரிவுரைகள் :

தமிழ் மொழியின் அமைப்பினை ஆங்கில மொழி அமைப்போடு ஒப்பிட்டுக் காட்டித் தெளிவுபடுத்தும் வகையில் சில விரிவுரைகள் ஏற்பாடு செய்யலாம். இத்தகைய விரிவுரைகளால், ஆசிரியர்

22nd February 1961]

களுக்குத் தமிழ் மரபிலிருந்து வழுவாத நல்ல தமிழை இயற்கையாகக் கையாளும் திறமை கைவரும். இத்தகைய விரிவுரைகளின் பின் சோதனைகளும் இருக்கவேண்டும்.

4. வகுப்பு நடைமுறை :

ஆங்கிலப் பாடம் நடத்திய முறை தமிழுக்குப் பொருத்தமாக இராமல் போகலாம். ஆங்கில விரிவுரைகளைப் புரிந்துகொள்வதே முதல் தடையாக இருந்தது. தமிழ் கல்லூரிக் கல்வி மொழியாகும் போது இந்த மொழித் தடை இல்லை. எனவே, கிளிப்பிள்ளைப் பாடம் மாதிரியாக வெறும் விரிவுரை ஆற்றுவதே ஆசிரியரின் நோக்கமாக இருக்கமுடியாது. மாணவர்கள் விரிவுரைகளின் போக்கைப் பின்பற்ற முடியும். ஆகையால் மாணவர்களின் சிந்தனையையும், ஆராய்ச்சித் திறனையும் தூண்டிவிடுவதே வகுப்பு விரிவுரைகளின் நோக்கமாக இருக்கவேண்டும். இந்த நோக்கத்திற்கு ஏற்றவாறு, வகுப்பு நடைமுறை (methodology) பற்றிச் சில விரிவுரைகள் ஏற்பாடு செய்யலாம். இவைகள் சொல்லழகு, பொருள் அடுக்கு, அறிவுப் பெருக்கு விரிவுரைகளாக அமையலாம். மேலும், புதுமுகப் பயிற்சி பெறுவோர்களில் அந்தந்தப் பாடங்களுக்கு உரியவர்கள் முதலில் தனித்தனியாகவும், பின்னர்ப் பொதுவாகவும் கூடி, வகுப்பு நடைமுறைப்பற்றித் திட்டம் வகுக்கலாம்.

5. கலைச் சொற்களில் பழக்கம் :

கல்லூரித் தமிழ்க் குழுவினரால் தயாரிக்கப்பட்ட கலைச்சொற்பட்டியல்கள் பயிற்சியாளர்க்குக் கொடுக்கப்பட வேண்டும். கலைச் சொற்களைத் தெளிவாகப் புரிந்து, மனத்திலே அமைத்துக் கொள்ள வேண்டியது இன்றியமையாததாகும். கலைச்சொற்களிலே தெளிவும், பழக்கமும் இருந்தால்தான், தடுமாற்றமோ, தயக்கமோ நேராமல் பாடம் நடத்த முடியும். பயிற்சியின்போது குறைந்தது வாரத்திற்கு இரண்டு சோதனைகளாவது இருக்கவேண்டும். சரியான கலைச்சொற்களை இனங்கண்டு தெரிவிக்கும் சோதனை 5 நிமிடத்திற்கும், தகுந்த கலைச்சொற்களைப் பயன்படுத்திச் சிறு கட்டுரைகள் எழுதும் பயிற்சி 15 நிமிடத்திற்கும் நடத்தலாம். கட்டுரைகள் எழுதுவதற்குப் பதிலாகத் தகுந்த பகுதிகளை ஆங்கிலத்தில் கொடுத்து மொழிபெயர்க்கவும் சொல்லலாம்.

### III. தனித்தனி வகுப்புப் பயிற்சி.

1. இதுவரையில் சொன்னவை எல்லாப் பாடங்களுக்கும் பொதுவானவை. இந்தப் பயிற்சி முடிந்தபின் அந்தந்தப் பாடங்களுக்கு உரியவர்கள் தனித்தனிக் குழுக்களாகப் பிரிவார்கள். இந்தப் பிரிவினை அநேகமாக இரண்டாம் வாரத்தில் நிகழலாம்.

2. நிபுணர்கள் நடத்தும் மாதிரி விரிவுரைகள் :

காலை நேரங்கள் அந்தந்தப் பாடங்களின் ஒவ்வொரு பிரிவிலும் ஒவ்வொரு மணி நேரம் நிபுணர்களின் மாதிரி விரிவுரைகளுக்கென்றே ஒதுக்கப்படவேண்டும். பயிற்சிக்காலம் முழுவதற்கும் இதற்கேற்ற கால அட்டவணை தயாரிக்கவேண்டும். உதாரணமாக: பொருளாதாரப் பிரிவில் முதல் நாள் பொருளாதாரக் கோட்பாடுகள் பற்றியும், இரண்டாம் நாள் பொருளாதார வரலாறு

பற்றியும்—மூன்றும் நாள் பொருளாதாரச் சிக்கல்கள் பற்றியும், இப்படியே தொடர்ந்து ஆறு நாட்களிலும் ஒவ்வொரு பொருள் பற்றியும் மாதிரி விரிவுரைகள் ஏற்பாடு செய்யப்படவேண்டும்.

**3. பயிற்சி பெறுவோரின் பயிற்சி விரிவுரைகள் :**

முதல் மணி நேரத்தில் நிபணர்களின் மாதிரி விரிவுரைகள் நடந்தபின், இரண்டாவது மணி நேரத்தில் பயிற்சி பெறும் ஆசிரியர்களே பாடம் நடத்தவேண்டும். மாதிரி விரிவுரையில் எடுத்துக் கொண்ட தலைப்பைத் தவிர, வேறு ஏதேனும் ஒரு தலைப்பே பயிற்சி வகுப்புக்குத் தேர்ந்தெடுக்கப்படவேண்டும். இது போன்ற, ஒருமணி நேரப் பயிற்சி விரிவுரை நடத்தும் வாய்ப்பு பயிற்சியாளர் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு தடவையாவது கிடைக்க வேண்டும். அரை மணி நேரம் நடத்தும் பயிற்சி விரிவுரைகள் பல கிடைக்குமாறு ஏற்பாடு செய்யவேண்டும். மூன்றுவது மணி நேரத்தில் அதுவரை பேசாத பயிற்சியாளர்கள் அதே பொருள்பற்றிப் பேசவேண்டும். நிபுணர்களின் மாதிரி விரிவுரை, பயிற்சி விரிவுரை ஆகியவற்றில் மேற்கொள்ளப்பட்ட அதே தலைப்பைப்பற்றி முன்னிலும் நன்றாகத் தமிழிலே எப்படி நடத்தலாம் என்பதைக் காட்டுவதாக மூன்றும் மணி நேரப் பேச்சுக்கள் அமையலாம்.

இத்தகைய விரிவுரைகள் நடக்கும்பொழுது பயிற்சியாளர்கள் குறிப்புக்கள் எடுக்கவேண்டும். விரிவுரைகளில் அவர்கள் காணும் குறைகளும், தாங்களே பாடம் நடத்தப் போகும்போது ஏற்படக் கூடுமெனக் கருதும் சங்கடங்களும் அந்தக் குறிப்புகளிலே இருக்க வேண்டும். பயிற்சி வகுப்புக்களில் பேசுவோர், பிறர் எடுத்துக் காட்டும் குறைகளை வரவேற்க வேண்டும். இத்தகைய ஆராய்ச்சி மனப்பான்மையைக் கொண்டால்தான், பயிற்சியாளரின் எல்லா வகையான சங்கடங்களும் சந்தேகங்களும் நீங்கும்.

**IV. கருத்தரங்குகளும் விவாதங்களும்.**

பயிற்சிக் காலத்தில் பிற்பகல் நேரமெல்லாம் கருத்தரங்கு களுக்கும் விவாதங்களுக்குமே ஒதுக்க வேண்டும். கருத் தரங்குகளை மாதிரிச் சொற்பொழிவாற்றியவர்கள் நடத்த வேண்டும். விவாதங்களைப் பயிற்சியாளர்களே நடத்தலாம். கருத் தரங்குகளின் நோக்கம் பாடங்கள்பற்றியதாக இருக்க வேண்டிய தில்லை ; அந்தந்தப் பாடங்களைத் தமிழில் எப்படித் திறம்பட நடத்துவது என்பதே நோக்கமாக இருக்கவேண்டும். காலையில் நடைபெற்ற நிபுணர்களின் மாதிரிச் சொற்பொழிவின்போது, பயிற்சி பெறுவோரின் சந்தேகங்களும் ஓரளவே தீர்ந்திருக்கலாம். எஞ்சியவற்றைப் பிற்பகல் நடைபெறும் கருத்தரங்கிலோ விவாதத் திலோ தெளிவு பெற்றுக் கொள்ளலாம். மாதிரிச் சொற்பொழி வாற்றிய நிபுணரும், பயிற்சி பெறுகிறவர்களும் ஒத்துழைத்தால், இந்த முறையில் சிறந்த வெற்றியும் பயனும் பெறமுடியும்.

**1. கலைச்சொற்கள் ஆராய்ச்சி :**

இந்தக் கருத்தரங்குகளில் கலைச்சொற்கள் பற்றியும், பல்வேறு பாடங்களின் அடிப்படைக் கருத்துக்களைத் தமிழில் சொல்லும் திறம்பற்றியும் ஆராய்ச்சிகள் நடத்தலாம். மாதிரிச் சொற்

பொழிவுகளிலும் பயிற்சி சொற்பொழிவுகளிலும் இந்த ஆராய்ச்சிக்கான குறிப்புக்கள் கிடைக்கும். கல்லூரித் தமிழ்க் குழுவினர் கொடுத்துள்ள கலைச்சொற்களும் இங்கே ஆராயப் படலாம். இறுதியாக, முன்னோடிக் கல்லூரியில் பயன்படுத்து வதற்குரிய கலைச் சொற்கள்பற்றி இறுதியான முடிவுகள் ஏற்படும்.

**2. சிக்கலான அடிப்படைக் கருத்துக்களின் பொருள்களை விளக்கல் :**

இந்த கருத்தரங்கினால் மற்றொரு பயனும் உண்டு. அந்தந்தப் பாடங்களில் சிக்கலான அடிப்படைக் கருத்துக்களின் பொருள் களை விளக்கல் எவ்விதம் என்ற தெளிவும் ஏற்படும்.

**3. கட்டுரைகள் :**

பயிற்சி பெறுவோர் எழுதுகின்ற பாடத் தொடர்பான கட்டுரை களைப்பற்றி விவாதிப்பதற்கும் இந்தக் கருத்தரங்குகளைப் பயன் படுத்தலாம். பயிற்சி தொடங்கும்போதே, பயிற்சி பெறுவோர் எழுதுவதற்குரிய கட்டுரைத் தலைப்புக்கள் வகுத்துப் பிரித்து விடுதல் வேண்டும். இந்தக் கட்டுரைகளில் அடிப்படை கருத்துக்களின் பொருள்களைப் பற்றி விவரிப்பதைவிட, கருத்துக்களைத் தெரிவிக்கும் மொழித்திறம் பற்றியே மிகுதியாக விவாதம் நடைபெறவேண்டும்.

**4. படங்கள் :**

வரலாறு போன்ற பாடங்களை நடத்துவதற்குப் பயன்படும் தரைப்படம், விளக்கப்படம் முதலியவை ஆங்கிலத்திலேயே உள்ளன. அவற்றைத் தமிழிலே தயார் செய்யும் பணியும் புதுமுகப் பயிற்சியின்போது மேற்கொள்ளப்படலாம்.

**5. வெளிவந்துள்ள தமிழ் அல்லது ஆங்கில நூல்கள் :**

அந்தந்தப் பாடங்கள் பற்றி எழுதப்பட்டுள்ள நூல்கள் பற்றி அறிந்துகொள்ளவும் கருத்தரங்குகள் பயன்படலாம்.

### V. பாடச் சுருக்கங்கள்—கையேடுகள்

1. தமிழில் பாடம் நடத்துவதற்கு இன்னும் சில வாரங்களே இருக்கின்றன. ஆங்கிலத்திலே புத்தகங்கள், ஆங்கிலத்திலே கைக் குறிப்புக்கள், ஆங்கிலத்திலே பாடச் சுருக்கங்கள் ஆகியவை ஆசிரியர்கள் வசம் இப்போது உள்ளன. இவற்றை நம்பித் தமிழிலே பாடம் நடத்துவதைவிட, இவற்றைத் தமிழிலே வைத்துக்கொண்டு பாடம் நடத்துவது நல்ல பலனைத் தருமென் பதில் சந்தேகம் இருக்கமுடியாது. வகுப்பில் நடத்துவதற்குரிய பாடங்கள் பற்றிய கட்டுரைகள், கைக்குறிப்புக்கள், மாதிரிப் பாடச் சுருக்கங்கள் முதலியவற்றைப் புதுமுகப் பயிற்சியின்போது தமிழிலேயே தயார் செய்யலாம். இவற்றிற்கான மாதிரிகளைப் பயிற்சி பெறுவோர்க்குக் கொடுத்து, ஏற்கனவே ஆங்கிலத்தில் அவர்கள் தயார் செய்து வருவதுபோல், தமிழில் தயார் செய்யும் முறைகள் பற்றிப் பயிற்சி அளிக்கலாம். மாதிரி விரிவுரை களுக்கும் பயிற்சி விரிவுரைகளுக்கும் பயன்பட்ட கைக்குறிப்புக் களின் பிரதிகளைப் பயிற்சி பெறுவோர் யாவருக்கும் கொடுக் கலாம்.

[22nd February 1961

2. கலைச்சொல்லகராதிகளைத் திருத்தி அமைத்தல் :

தங்கள் தங்கள் பாடங்களுக்குரிய கலைச்சொல்லகராதி ஒன்றைத் தயாரிக்கும்படி பயிற்சி பெறுவோரைக் கேட்டுக் கொள்ள வேண்டும். கல்லூரித் தமிழ்க்குழு வெளியிட்டுள்ள அகராதிகளைத் திருத்தியும் சேர்த்தும் முடிவான ஒரு அகராதி தயார் செய்ய வேண்டும்.

3. சிக்கலான அடிப்படைக் கருத்துக்கள் :

அவரவர் பாடங்களிலுள்ள சிரமமான அடிப்படைக் கருத்துக்கள் பற்றிச் சிறு குறிப்புகளும் அவர்கள் தயாரிக்க வேண்டும்.

4. மாதிரிக் கேள்விகளும், விடைகளும் :

மாதிரிக் கேள்விகளும் மாதிரி விடைகளும் பயிற்சி பெறுவோர் தயாரிக்கவேண்டும். இந்த ஏற்பாடு மாணவர்களுக்குத் தெளிவு தரப் பயன்படும். "தமிழிலே கேள்விகள் எப்படி வரும்? விடை எப்படி எழுதவேண்டியிருக்கும்?" என்பதுபற்றி மாணவர்கள் தெளிவாக உணரமுடியும். பல்கலைக்கழகத்து ஆங்கில வினாத் தாள்களையே தமிழில் மொழிபெயர்த்துக்கொள்வதே சிறந்த ஏற்பாடாக இருக்கும். முன்னோடிக் கல்லூரி மாணவர்கள் பொதுத் தேர்வு எழுதும்போது, ஆங்கிலத்தில் தயாரான வினாத் தாளின் தமிழாக்கமே தரப்படும் என்றுதான் எதிர்பார்க்க வேண்டும்.

5. பாடத் திட்டங்கள்-நூற் குறிப்பு :

பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ள பாடத் திட்டங்களைப் பயிற்சி பெறுவோர் மொழிபெயர்க்க வேண்டும். பின்னர் அவரவர்களின் பாடத்திற்கு ஒரு விளக்கக் குறிப்புத் தயார் செய்து ஒவ்வொரு ஆண்டும் எவ்வளவு மணி நேரம் ஒவ்வொரு பாடத்திற்கும் ஒதுக்கப் பட வேண்டும், அம் மணி நேரங்களில் நடத்தப்படவேண்டிய பாடத் தலைப்புக்கள் என்ன என்பவற்றைக் குறிப்பிடல் வேண்டும். இப் பாடத் தலைப்புகளில் முழுத் தேர்ச்சி பெற எந்தெந்தப் புத்தகங்களைப் படிக்க வேண்டுமென்ற குறிப்பும் தயார் செய்யவேண்டும்.

### VI. வசதிகள்

1. பயிற்சி பெறும் ஒவ்வொருவருக்கும் அவரவர் பாடம் பற்றியது மட்டுமல்லாமல், தொடர்புடைய பிற கலைச் சொற் பட்டியல்களும் தரவேண்டும்.

2. புதுமுகப் பயிற்சி பெறுவோரின் வசதிக்காகக் குறைந்தது 12 அகராதிகளாவது இருக்க வேண்டும். இந்த அகராதிகள் ஆங்கிலம்-தமிழ், தமிழ்-ஆங்கிலம் ஆகிய இரு பிரிவுகளிலும் இருக்க வேண்டும்.

3. கலைக் களஞ்சியத்தின் சில பிரதிகளும், கலைக்கதிரின் பழைய தொகுதிகளும் பயிற்சியின்போது இருக்கவேண்டும். கட்டுரைகள் எப்படித் தயாரிக்கலாம் என்பதை அறிவதற்கும், துணை நூலாகப் பயன்படுவதற்கும் இவை பயன்படும்.

4. தமிழில் பல்வேறு பாடங்கள்பற்றி வெளிவந்துள்ள நூல் களின் தொகுப்பு முன்னோடிக் கல்லூரியில் இருக்கவேண்டும்.

22nd February 1961]

அவற்றில் போதுமான அளவில் பிரதிகளும் இருக்க வேண்டும். பயிற்சி பெறுவோர் விரிவுரைகளுக்குத் தயார் செய்ய இவை வசதியாக இருக்கும்.

பயிற்சி பெறுவோர் உடல்நலம் கவனிக்க ஒரு கம்பௌண்டர் இருக்கவேண்டும்.

VII. புதுமுகப் பயிற்சியின் நிருவாக நடைமுறை.

1. பயிற்சித்துறை.—கல்லூரித் தமிழ்க் குழுவின் தலைவர் புதுமுகப் பயிற்சியின் கௌரவ நெறியாளராக இருப்பார். கல்லூரித் தமிழ்க் குழுவின் செயலாளர் இப் பயிற்சிக்கும் செயலாளராக இருந்து, கடிதப் போக்குவரத்துக்களைக் கவனித்துக்கொள்வார். குழுவின் பிற உறுப்பினர்கள் இப் பயிற்சியின் இணை நெறியாளர்களாக இருந்து உதவுவார்கள். அவர்கள் தங்கள் தங்கள் பாடங்களின் பொறுப்பை ஏற்பார்கள். புதுமுகப் பயிற்சியின்போது நடத்துவதற்கு விவாதிப்பதற்கும் உரிய தலைப்புக்களை இணை நெறியாளர்களே முடிவு செய்வர்; மேலும், அந்தந்தப் பாட மாதிரி விரிவுரையாற்றுவோரையும் அவர்களே முடிவு செய்வர்.

2. கல்லூரித் தமிழ்க்குழு உறுப்பினர்கள் பயிற்சி வகுப்புகளின் போது எல்லா நாட்களிலும் நேரில் இருப்பது நல்லது. அப்போது தான் எல்லாச் சிக்கல்களையும் அறிந்துகொள்ள முடியும்.

3. பிற.—(அ) பயிற்சி பெறுவோர், உடல்நலக் குறைவினாலன்றி வேறு எக்காரணத்தினாலும் பயிற்சியின் எப்பிரிவிலும் பங்கு கொள்ளாமல் இருக்கக்கூடாது. வருகைப் பதிவிலே கோளாறுகள் இருந்தால், பயிற்சி மறுக்கப்படும்.

(ஆ) பயிற்சியில் சேருவோர்க்கு வேண்டிய காகிதம் முதலியன தரப்படல் வேண்டும்.

(இ) பயிற்சியின்போது நடக்கும் எல்லா நடவடிக்கைகள் பற்றியும் விவரக் குறிப்புக்கள் பதிவு செய்யப்பட வேண்டும். இந்தக் குறிப்புகள் தொகை வகையாகத் தயாரிக்கப்பட வேண்டும். பயிற்சியின்போது பெற்ற அனுபவங்களைக் கொண்டு கையேடு ஒன்றும் தயாரிக்கலாம்.

(ஈ) பயிற்சி வகுப்பின் நடவடிக்கைக் குறிப்புகளும் கைக் குறிப்பேடும் அச்சிடப்பட்டு, முன்னோடிக் கல்லூரி ஆசிரியர்களுக்கு வழங்கப்படவேண்டும். ஜுலை மீ முதல் வாரத்தில் இவை கிடைக்க வேண்டும்.

(உ) பயிற்சி பெறுவோர் ஒவ்வொருவரைப் பற்றியும், அவர்களின் திறமை முதலியன பற்றியும் முழு விவரக் குறிப்பினைத் தயாரிக்க வேண்டும். முன்னோடிக் கல்லூரிக்குரிய ஆசிரியரைத் தேர்ந்தெடுப்பதற்குரிய பட்டியலில் எவ்வெவரைச் சேர்க்கலாம் என்பதை முடிவு செய்ய இந்தக் குறிப்பு மிகவும் பயன்படும்.

VIII. நிருவாகம்

முன்னோடிக் கல்லூரியின் முதல்வர் பயிற்சியின் தலைமை நிர்வாக அதிகாரியாக இருப்பார். பயிற்சி நடப்பதற்கான ஏற்பாடுகளெல்லாம் அவரால் செய்யப்படும். இணை நெறியாளர்கள்

தரும் திட்டத்தையொட்டிப் பயிற்சி வகுப்புகளுக்குரிய கால அட்டவணை, வேலைத் திட்டம் முதலியவற்றை அவர் தயார் செய்வார். பயிற்சி பெறுவோர், மற்றும் இத் திட்டத்தோடு தொடர்புடையோர் ஆகியவர்கள் தங்குவதற்கு ஏற்ற வசதிகளையும் அவரே செய்வார். பயிற்சிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் அவருடன் தொடர்பு கொள்ளுமாறு அறிவிக்கப்பெறுவர்.

**கால அட்டவணை**

| | | |
|---|---|---|
| முதல் நாள். | தொடக்க விழா. | புத்தகக் காட்சி திறப்பு : கல்வி அமைச்சர். |
| 2-ம் நாள். | முற்பகல் .. | கல்லூரித் தமிழ்க் குழுத் தலைவரின் பேச்சு. |
| | பிற்பகல் .. | தனித்தனிப் பிரிவுக் கூட்டங்கள், அந்தப் பிரிவுக்கு உரிய இணை நெறியாளர்களும், பாட வல்லுனர்களும் பேசுவர். |
| 3-ம் நாள். | .. | போதனை மொழியாகத் தமிழின் தகுதி பற்றி விவாதம். |
| 4-ம் நாள். | .. | தமிழின் அமைப்புப் பற்றிய சொற்பொழிவும் விவாதமும். |
| 5-ம் நாள். | முற்பகல் .. | அந்தந்தப் பிரிவுக்குரிய விரிவுரைகள், கருத்தரங்குகள், விவாதங்கள் பற்றிய திட்டம் வகுத்தலும், பிரித்தலும். (முற்பகலில் முடியாவிட்டால் பிற்பகலிலும் தொடரும்.) |
| 6-ம் நாள். | முற்பகல் .. | முதல் மணியில் மாதிரிச் சொற்பொழிவு; 2, 3-ஆம் மணிகள்—பயிற்சிச் சொற்பொழிவுகள். |
| | பிற்பகல் .. | கருத்தரங்குகளும் விவாதங்களும். |

பயிற்சி மூன்று வாரங்களுக்கு நடைபெறும். தேவையாயின் மேலும் ஒரு வாரம் நீடிக்கலாம். மூன்றாம் வாரத்தில் பிற்பகல்களில் கருத்தரங்குகளுக்குப் பதிலாகப் பயிற்சிச் சொற்பொழிவுகள் நடக்கலாம்.

## IX. தமிழ்மொழி வழியே கல்வி பயிற்றும் கல்லூரி

இவ்விதம் புதுமுகப் பயிற்சி பெற்ற ஆசிரியர்களையே தமிழ் மொழி வழியே கல்வி பயிற்றும் கல்லூரிகளுக்கு நியமிக்க வேண்டும். இவ்விதம் தமிழ் மொழி வழியே கல்வி பயிற்றுவதினாலேயே ஆங்கில மொழியின் தரம் குறையலாம் என்ற பிரச்சினை ஏற்படுகின்றது. அதற்குக் கீழே கண்ட முறைகளைக் கையாள வேண்டும்.

## X. ஆங்கிலத்தின் தரம் உயர்வு

கல்லூரித் தமிழ்க் குழு, தனது முதல் ஆய்வறிக்கையின் பகுதியில் கோயம்புத்தூர்க் கல்லூரியில் தமிழில் பாடங்களைக் கற்பிக்கும் போது ஆங்கிலத்தைப் புறக்கணிக்கக்கூடாது என்றும் ஆங்கில போதனை இன்றியமையாதது என்றும் கூறியுள்ளது. இம் முன்னோடிக் கல்லூரி மாணவர்கள் ஆங்கிலத் தரம் குறைந்தால் அதைத் தமிழ் மொழிவழிக்கல்வி மேல் ஏற்றிக் குறைகூறாதவாறு ஆங்கிலம் சிறப்புக் கவனம் பெறுதல் வேண்டும் என்று அவ்வறிக்கை வற்புறுத்தியுள்ளது. ஆங்கிலப் பாடத் திட்டம் மற்றைய

22nd February 1961]

**கல்லூரிகளில் உள்ளதுபோலவே இங்கும் இருக்கும் என்பதில்** ஐயமில்லை. ஆனால், ஆங்கில மொழி வழிக்கல்வியுள்ள கல்லூரியின் **மாணவர்கள் ஆங்கிலத்தைக் கேட்கவும் படிக்கவும் பெற்றிருக்கும்** வாய்ப்பைக் காட்டிலும் இந்த முன்னோடிக் கல்லூரியின் மாண வர்கள் குறைந்த வாய்ப்பினையே பெற்றிருப்பார்கள் என்பது ஒப்புக்கொள்ளவேண்டியதே. ஆதலின் தமிழ் கல்லூரிக் கல்வி மொழியாக இருப்பதால், ஆங்கிலப் பயிற்சி பெறுவதற்கு நேர்ந்த இத்தகைய வாய்ப்புக் குறைவை நிறைவு செய்தற்குச் சில முயற்சிகளை மேற்கொள்ளவேண்டும்.

**XI. ஆங்கிலத்தின் தரம் உயர சிபாரிசுகள்**

1. **மாணவரைத் தேர்ந்தெடுத்தல்.**—ஆங்கிலத்தில் அதிக மதிப் பெண் பெற்றுள்ள மாணவர்களையே தமிழ் கல்விமொழியாக அமையும் இந்த வகுப்புகளுக்குத் தேர்ந்தெடுக்க வேண்டும். குறிப்பாக ஆங்கிலத்தில் மிகக் குறைந்த தேர்ச்சியுடைய மாணவர்களைச் சேர்த்தல் கூடாது.

2. **ஆசிரியர்.**—நிறைந்த அனுபவமுடைய ஆங்கில ஆசிரியர் களே இக்கல்லூரிக்கு நியமிக்கப்பட வேண்டும். இதற்கென அமைக்கப்பெறும் தனிப்பயிற்சி வகுப்புக்கள், கருத்தரங்குகள் முதலியவற்றில் இவ்வாசிரியர்களுக்குப் பயிற்சி தரல்வேண்டும். ஐதராபாத்து ஆங்கில நடுக் கல்லூரியின் பயிற்சிச் சாதனங்களைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

3. **ஆங்கிலத்தில் அதிகப் படிப்பு.**—ஆங்கிலப் படிப்புக்கெனத் தனி நேரம் ஒதுக்கி அந்நேரத்தில் மாணவர்கள் நூல்நிலையங் களுக்குச் சென்று தங்கள் பாடப்புத்தகங்களையன்றிப் பிற ஆங்கிலப் புத்தகங்களைப் படித்தல், குறிப்புத் தயாரித்தல் முதலிய வற்றைச் செய்யுமாறு அவர்களுக்கு ஊக்கம் அளித்தல் வேண்டும்.

4. **சிறப்புக் கவனிப்பு.**—மாணவர்களை ஆங்கிலக் கட்டுரைகள் எழுதும்படி ஏற்பாடு செய்யவேண்டும். தமிழ்-ஆங்கில மொழி பெயர்ப்புக்களில் பயிற்சி கொடுக்க வேண்டும். கட்டுரைகளைத் திருத்துவதற்கும், மாணவர்களைத் தனித்தனியே கவனிப்பதற்கும் மேலும் திறம் பெற்ற சில கட்டுரை ஆசிரியர்களை நியமிக்க வேண்டும். அவ்வாசிரியர்கள் மாணவர்கள் எழுதும் கட்டுரை களில் உள்ள எழுத்துப் பிழைகளையும் இலக்கணப் பிழைகளையும் நன்கு கவனித்துத் திருத்த வேண்டும். பொதுவாக எழுத்துப் பிழைகள் வரக்கூடிய சொற்களை வரிசைப்படுத்திக் கொடுக்க வேண்டும். பொதுவான சில எழுத்துப் பிழைகளை அவர்களுக்குக் குறித்துக் காட்டித் திருத்தவேண்டும். இறந்தகாலம், நிகழ் காலம், எதிர்காலம் இவற்றைப்பற்றிய ஆங்கில வாக்கிய அமைப்பு முறைகளில் மாணவர்களுக்குத் தக்க பயிற்சி அளிக்க வேண்டும்.

5. **ஆங்கிலத்தில் உள்ள பாடநூல்களைப் படித்தல்.**—மாணவர் கள் தங்கள் சிறப்புப் பாடங்களைத் தமிழில் படித்த போதிலும், அதற்குரிய சில தமிழ் நூல்களையே பயன்படுத்திய போதிலும், அப்பாட சம்பந்தமான பிற ஆங்கில நூல்களையும்,

[22nd February 1961

இதழ்களையும் படிக்குமாறு தூண்டல் வேண்டும். இது மாணவர்கள் தங்கள் ஆங்கிலக் கலையறிவை வளர்த்துக்கொள்ளப் பெரிதும் துணை புரியும்.

**6. ஆங்கிலக் கழகங்கள்.**—மாணவர் ஆங்கிலக் கழகம் ஒன்று இருக்க வேண்டும். அக்கழகத்தில் கலந்து மாணவர்கள் ஆங்கிலச் சொற்பொழிவாற்றவும், விவாதம் செய்யவும் வேண்டிய வசதிகளை அமைக்க வேண்டும்.

## GOVERNMENT OF MADRAS

### EDUCATION AND PUBLIC HEALTH DEPARTMENT.

*(Education)*

**G.O. Ms. No. 917, 5th May 1960.**

Education--Introduction of Tamil Medium in the Government Arts College, Coimbatore—Conduct of Orientation Course, etc.—Orders passed.

READ—the following papers :—

From the Director of Public Instruction No. 521-K2/60, dated 14th April 1960.

From the Chairman, College Tamil Committee, dated 2nd April 1960.

*Order—No.* 917, *Education, dated 5th May* 1960.

The Government sanction the proposal for the conduct of an Orientation Course, in the Government Arts College, Coimbatore in May 1960, for a period not exceeding four weeks, for lecturers, assistant lecturers and assistant professors, for training them to teach subjects of the B.A. degree classes in the Tamil medium. The Principal, Government Arts College, Coimbatore, will be the Chief Administrative Officer.

2. A scheme has been prepared by the College Tamil Committee for the conduct of the Orientation Course. This scheme is approved subject to the following distribution of work among the Chairman and Members of the College Tamil Committee :—

| *Name.* (1) | *Subject.* (2) | *Designation.* (3) |
|---|---|---|
| 1 Sri T. P. Meenakshisundaram, Head of the Department of Tamil, Annamalai University. | History and Tamil. | Honorary Director. |
| 2 Sri G. R. Damodaran, Principal, P. S. G. College of Technology, Coimbatore—Chairman. | Minor Science subjects. | Honorary Joint Director. |
| 3 Sri V. A. Devasenapathy, Reader in Philosophy, University of Madras. | Philosophy .. | Do. |
| 4 Sri K. R. Appalachari, Principal, V. O. C. Training College, Tuticorin. | General Psychology. | Do. |
| 5 Dr. Aram, Principal, Rural Higher Educational Institute, Pariyanaickenpalayam, Coimore. | Experimental Psychology . | Do. |

22nd February 1961]

| Name. | Subject. | Designation. |
|---|---|---|
| (1) | (2) | (3) |
| 6 Sri B. R. Krishnamurthy, Principal, P. S. G. Arts College, Coimbatore. | Place of English in the Tamil medium institutions. | Honorary Joint Director. |
| 7 Sri B. M. Thirunaranan, Principal, Government Arts College, Coimbatore. | Geography .. | Honorary Joint Director and Chief Administrative Officer. |
| 8 Sri S. Velayudham, Chief Professor of Economics, Presidency College, Madras. | Economics, Politics and Commerce. | Honorary Joint Director. |

3. The Government also approve the proposal of the College Tamil Committee to invite distinguished persons, academic experts and authors commissioned by the College Tamil Committee to write text-books to give lectures to trainees. The distinguished persons and academic experts who are non-Government servants will be paid travelling allowance and daily allowance according to the rates admissible to the members of first class committees and such persons who are Government servants will draw travelling allowance and daily allowance according to Madras Travelling Allowance Rules.

4. The Travelling Allowance and daily allowance payable to the authors who have been commissioned by the College Tamil Committee to write text-books will be paid at the rates admissible under the Madras Travelling Allowance Rules subject to the condition that if the daily allowance payable is less than Rs. 5 per day, they will be paid at the rate of Rs. 5 per day.

5. The trainees of the Orientation Course will be paid travelling allowance and daily allowance at the rates admissible under the Madras Travelling Allowance Rules without any reduction for the period of halt in excess of 10 days, plus a stipend of Rs. 60 each.

6. The period of absence of Government servants attending the Orientation Course will be treated as on duty.

7. The Principal, Government Arts College, Coimbatore, will be the countersigning authority of travelling allowance bills in respect of non-Government servants who attend the Orientation Course in the capacity of trainees, special lecturers, authors of books, etc. The Principal, Government Arts College, Coimbatore, will receive the travelling allowance bills of these persons and countersign the same.

8. The Chairman and non-Government members of the College Tamil Committee attending the Orientation Course as Directors and Joint Directors will draw travelling allowance and daily allowance as per orders in paragraph 10 of the G.O. Ms. No. 748, Education, dated 14th April 1959, at the rates admissible to members of a first class committee. The Secretary of the College Tamil Committee and the members of the College Tamil Committee who are Government servants will draw travelling allowance and daily allowance according to the Madras Travelling Allowance Rules without any reduction for the period of halt in excess of ten days.

[22nd February 1961

The expenditure in connection with the Orientation Course will be debited to the head of account " 37. Education—s. Miscellaneous—C. Schemes under the Second Five-Year Plan--11. Preparation of College text-books and lecture manuals in Tamil ". Necessary additional provision will be made by reappropriation in the final modified appropriation for the year 1960-61.

9. This order is issued with the concurrence of the Finance Department—Vide their U.O. Note No. 46996/Allcs-1/60-1, dated 30th April 1960.

(By order of the Governor )

K. SRINIVASAN,
*Secretary to Government.*

To the Chairman and Members of the College Tamil Committee.
,, the Secretary, College Tamil Committee, Madras-9.
,, the Director of Public Instruction, Madras-6.
,, the Accountant-General, Madras-18.
,, Sri S. Natarajan, Accountant-General, Madras-18.
,, the Accountant-General (Concurrent Audit), Madras-9.
,, the Pay and Accounts Officer, Madras-9.
,, the Principal, Government Arts College, Coimbatore.
Copy to the Finance Department.

26. The Professors, Assistant Professors, Lecturers and Assistant Lecturers to undergo the training were selected by inviting applications through a notification, dated 11th March 1960 in the *Fort St. George Gazette* and in papers, and after consulting the Director of Public Instruction in respect of Government servants. Forty-five persons (existing Professors, Assistant Professors, Lecturers and Assistant Lecturers) joined the Course. The Orientation Course was inaugurated by the Minister for Finance on 11th May 1960.

27. The inauguration speech by Minister for Finance is reproduced below :—

கல்வித்திட்டம் எப்படி அமைய வேண்டும் ?

" இன்றைய நிகழ்ச்சியிலே நான் கலந்து கொள்ளும்பொழுது பல்வேறு எண்ணங்கள் என்னுடைய மனதிலே தோன்றுகின்றன. புதிய சமுதாயத்தை வகுப்பதில் நாம் எடுத்துக்கொண்டு இருக்கக் கூடிய முயற்சிகளில், இது மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது என்பது என்னுடைய கருத்து. இன்றைக்கு புதிய புதிய மாறுதல்கள், புதிய புதிய முறைகள், புதிய புதிய திறமைகள் மக்களிடத்திலே தோன்ற வேண்டுமென்று சொன்னால், எந்த அளவிற்கு சிந்தனை சக்தி மக்கள் மனதிலே உயர்கின்றதோ அந்த அளவிற்குத்தான் நாம் இத்துறையிலே முன்னேற்றம் காண முடியும். அப்பேர்ப்பட்ட சிந்தனை சக்தி நம்முடைய இளைஞர்கள் மனத்திலே மேலும் மேலும் பெருக வேண்டும். அதற்கு உறுதுணையாகக் கல்வித் திட்டம் அமைய வேண்டும் என்பதுதான் இன்றைக்கு எல்லோருடைய கருத்தாகவும் இருக்க வேண்டும்

22nd February 1961]

என்பதில் அபிப்பிராய பேதம் இருப்பதற்கே இடம் இல்லை. அந்த முறையில் நம்முடைய கல்வித் திட்டம் எப்படி அமையவேண்டும் என்பதைப்பற்றியும் கருத்து வேறுபாடு இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை.

ஒன்றுபட்ட முயற்சி வேண்டும்.

ஆனால் அந்த லட்சியத்தை அடைவதற்கு எடுத்துக் கொள்ளக் கூடிய முயற்சிகள் எவ்வாறு இருக்க வேண்டுமென்பதிலே சில கருத்து வேறுபாடுகள் இருக்கின்றன என்பதை நாம் ஒப்புக் கொள்ள வேண்டும். அதிலும் நாம் இன்று எடுத்து இருக்கக் கூடிய ஒரு முயற்சி கல்லூரிகளிலேயும் போதனா மொழி தமிழாக வேண்டும் என்பதைப் பற்றியதாகும். அதை இன்றைக்கு இல்லா விட்டாலும் என்றாவது ஒரு காலத்தில் ஏற்படுத்தித்தான் தீரவேண்டும். இன்றைக்கு நம் நாட்டிலே இருக்கக்கூடிய பெரியவர்களாக இருந்தாலும் சரி, வெளிநாட்டிலே இருக்கக்கூடிய பேரறிஞர்களாக இருந்தாலும் சரி தொடர்ந்து வேற்று மொழியின் மூலமாகத்தான் பாடங்களை கற்க வேண்டும், அல்லது தலைமுறை தலைமுறையாக அவ்வாறுதான் இருக்க வேண்டும் என்று சொல்லக்கூடியவர்களை நான் இதுவரையில் பார்த்ததும் இல்லை; கேட்டதும் இல்லை. ஆனால், அந்த லட்சியத்தை எப்படி நிறைவேற்றுவது என்பதைப்பற்றிக் கருத்து வேறுபாடுகள் நம்மிடையே இருக்கின்றன என்பதை நான் காண்கிறேன். இதிலே நாம் எடுக்கக்கூடிய முயற்சி இந்தக் கருத்து வேறுபாடுகள் இல்லாமல் ஒன்றுப்பட்ட முயற்சியாக இருக்கவேண்டும் என்பது தான் நான் விரும்புவது. இதுதான் என்னுடைய அவா.

வேற்றுமைகளை நீக்குவது நம் கடமை.

அதே முறையில்தான் இதற்கான நடவடிக்கைகளை, இதற்கான திட்டங்களை வகுக்கும்பொழுது, தமிழ் உடனடியாக வந்தாக வேண்டும் என்று கருதுகின்றவர்களை விட இதை எவ்வளவு ஒத்திப்போட வேண்டுமோ அவ்வளவு தூரம் ஒத்திப் போட வேண்டும் என்று எண்ணுகின்றவர்கள் மனத்தையும் திருப்பி, அவர்களுடைய ஒத்துழைப்பையும் பெற்று, அவர்களும் திட்டத்தை ஒப்புக்கொள்ளக் கூடிய முறையிலே திரும்பத் திரும்ப இதைப்பற்றிப் பரிசீலனை செய்து, ஆலோசனை செய்து, திட்டங்கள் அமைக்கப்பட்டு இருக்கின்றன என்பதை நான் இன்றைக்கு மிகவும் பணிவுடன் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். தமிழ் வேண்டும் என்று சொல்லுகின்றவர்களை, நான் சொல்லித்தான் திருப்ப வேண்டும் என்ற அவசியமே கிடையாது. இன்றைக்கு எல்லோருடைய ஆதரவும் இந்தத் திட்டத்திற்கு வேண்டும். அப்படி ஒன்றுபட்ட முயற்சியின் அடிப்படையில்தான் நாம் நல்ல முறையிலே வெற்றி காண முடியும் என்று சொல்லும்பொழுது, இதிலே கொஞ்சம் சந்தேகம் கொள்கின்றவர்களுடைய மனத்திலே இருக்கக்கூடிய வேற்றுமைகளை நீக்குவதற்கு முயற்சி செய்வது நம்முடைய கடமை என்பதையும் நாம் உணரவேண்டும்.

[22nd February 1961

ஆரம்ப வேலையை நாம் துவக்கி வைப்போம்.—இதிலே கருத்து வேற்றுமை வெவ்வேறு விதமான அடிப்படைகளிலே ஏற்பட்டு இருக்கின்றது. முதல் முதலிலே இந்தக் காரியத்தை நிறைவேற்ற வேண்டும் என்று சொன்னால் இதை யார் நிறைவேற்றுவது என்பதைப்பற்றி கருத்து வேற்றுமை இருப்பதற்கு இடம் உண்டு. இது பல்கலைக் கழகத்துக்குரிய விஷயம். ஆகையினாலே, இதிலே எடுக்க வேண்டிய நடவடிக்கைகள் எல்லாம் பல்கலைக்கழகம்தான் எடுக்க வேண்டும் என்று சொல்லும்பொழுது அதை நான் உடனே ஒப்புக் கொள்ளத் தயாராக இருக்கின்றேன். அதற்காகவே சென்ற ஐந்து, ஆறு ஆண்டுகளாகப் பல்கலைக் கழகம் இந்தத் துறையிலே முயற்சி எடுக்க வேண்டும், அதற்கான ஒரு சூழ் நிலையை ஏற்படுத்தவேண்டும் என்கின்ற முறையிலே என்னைப் பொறுத்த வரையிலும் முயற்சி எடுத்து வந்து இருக்கின்றேன். இருந்தாலும் அதிலே வெற்றி காண முடியவில்லை. நான் வேகமாகப் போகவேண்டும் என்று சொல்லவில்லை. ஆமை வேகத்திலே போகலாம் என்றுகூட சொல்லவில்லை. ஆரம்பம் செய்தால் போதும், அது எந்த வேகத்தில் போகக் கூடுமோ அந்த வேகத்தில் போய்க்கொண்டு இருக்கட்டும் என்கின்ற கருத்தைத்தான் 5, 6 வருடங்களாக வலியுறுத்திக்கொண்டு வந்திருக்கின்றேன். இதிலே ஆரம்பம் செய்வதற்கே நாம் தயங்கிக் கொண்டு இருப்போமானால், அந்த ஆரம்பம் எப்பொழுது வரப் போகின்றது என்பதைப்பற்றி நமக்கே மனதில் ஒரு குழப்பமான நிலைமை ஏற்பட்டு விடுகின்றது.

இந்தத்துறையில் அரசியலாரின் பொறுப்பு.

ஆகையினால்தான், இன்றைக்கு முயற்சி செய்து பார்த்து, இதிலே பல்கலைக் கழகத்தினர் அவர்களுக்கு இருக்கக் கூடிய பல்வேறு வேலைகளினாலோ அல்லது இது அவசியம் இல்லை என்கின்ற கருத்தினாலோ, இதை ஒத்திப் போட்டுக் கொண்டே வரும்பொழுது, இதில் சர்க்காருடைய பொறுப்பு என்ன என்பதைப் பற்றியும் கல்வி மந்திரி என்கின்ற முறையிலே நான் கொஞ்சம் யோசனை செய்து பார்க்கக் கடமைப்பட்டு இருக்கின்றேன். இது அவசியமா இல்லையா என்பதைப்பற்றி யோசனை செய்து, அவசியம் என்று ஏற்படுமேயானால் பல்கலை கழகம் செய்யவில்லை என்கின்ற சாக்கை வைத்துக்கொண்டு இதை இப்படியே ஒத்திப் போட்டுக் கொண்டே போவதா அல்லது ஏதாவது ஒரு ஆரம்பம் செய்ய வேண்டுமா என்பதை ஆராய்ந்தோம். இதை எப்படியும் ஆரம்பித்துத்தான் தீரவேண்டும் என்கின்ற முறையிலே ஒரு திட்டத்தைத் தயார் செய்து, பல்கலைக் கழகத்தில் இருக்கக் கூடிய துணை வேந்தர்களையும் கூப்பிட்டு, அவர்களுடன் அதை ஆலோசனை செய்து, அவர்கள் ஆலோசனை கூறியபடியே அந்தத் திட்டத்தை வகுத்து, மேற்கொண்டு ஆரம்பம் செய்ய வேண்டுமென்று முன்வந்து இருக்கின்றேன். இதைப் பல்கலைக் கழகமே ஆரம்பித்து இருந்தால் மிகவும் நன்றாக இருந்திருக்கும் என்பதில் சந்தேகம் கிடையாது. இப்பொழுது சொல்லப்பட்டு வருகின்ற கருத்துக்களுக்கு எல்லாம் இடம்

22nd February 1961]

இல்லாமல் போய் இருந்திருக்கும் என்றே நான் கருதுகின்றேன். ஆனல் அப்பேர்ப்பட்ட ஒரு நிலைமை ஏற்படவில்லை. இவ்வளவு முயற்சிகள் எடுத்துக்கொண்டு இருந்தாலும்கூட, இன்றைக்குச் சென்னைப் பல்கலைக் கழகமாக இருந்தாலும் சரி, அல்லது அண்ணுமலைப் பல்கலைக் கழகமாக இருந்தாலும் சரி, இதை நாங்கள் எடுத்து நடத்துகின்ரேம் என்று முன் வந்தால் இந்தத் திட்டம் முழுவதையும் அவர்கள் கையில் ஒப்புவித்து, அவர்கள் இதற்கு என்ன நிதி வேண்டும் என்று கேட்கின்ருர்களோ அந்த நிதியையும் ஒதுக்கி வைத்து, அந்தப் பொறுப்பையும் அவர்களிடத்தில் ஒப்புவித்துவிடத் தயாராக இருக்கின்றேன் என்பதை இன்றைக்கும் நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

### பல்கலைக் கழகத்தைப் புறக்கணிக்கவில்லை

ஆனல், இத்திட்டமே அவசியம் இல்லை ; இப்பொழுது செய்யவும் கூடாது என்கின்ற கருத்து இருக்குமேயானல் அப்பொழுதுதான் அதைப்பற்றி நாம் யோசித்துப் பார்க்க வேண்டியதாக இருக்கிறது. இது மாதிரி எப்பொழுதுமே ஒத்திப் போட்டுக் கொண்டே போகலாமா அல்லது உடனடியாக இதற்கு ஒரு ஆரம்பம் செய்யலாமா என்பதைப்பற்றி யோசிக்க வேண்டிய ஒரு கடமை நமக்கு ஏற்பட்டு இருக்கிறது. ஆகையினலேதான் இதை எப்படியும் ஆரம்பித்து வைக்கலாம், மத்தியிலே பல்கலைக் கழகம் எடுத்துக்கொள்ளுவதற்குத் தயாராக இருந்தால் அப்படியே அவர்களிடத்தில் ஒப்புவித்துவிடலாம் என்கின்ற ஒரு அடிப் படையில் இந்த ஆரம்பம் செய்யப்பட்டிருக்கின்றது. பல்கலைக் கழகத்தைப் புறக்கணிக்க வேண்டும் என்கின்ற முறையிலே ஆரம்பித்திருக்கக்கூடிய ஒரு பணியாக யாரும் இதை எடுத்துக் கொள்ளக்கூடாது. அவர்களுக்கு இன்றைக்கு இருக்கக்கூடிய சூழ்நிலையில் இந்தத் திட்டத்தை ஆரம்பிக்க முடியாமல் இருப்ப தனல் அரசியல் வாதிகளோ அல்லது எனக்கு இருக்கக்கூடிய சர்க்கார் நிருவாகத்தினர்களோ இல்லாமல், கல்வித் துறையிலே பணியாற்றக்கூடிய ஆசிரியப் பெருமக்களை அடிப்படையாக வைத்துக்கொண்டு அவர்களுக்கு உதவி செய்கின்ற முறையிலே, இந்தக் காரியத்தை நான் ஆரம்பித்துள்ளேன். பின்னலே அதை நடத்துவதற்கு பல்கலைக் கழகம் முன் வந்தாலும், அவர்களே இதை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருந்தாலும், அவர்களிடத்திலே ஒப்புவிப்பதற்குத் தயாராக இருக்கக்கூடிய ஒரு நிலையில்தான் இந்தத் திட்டம் நடைபெற்றுவருகின்றது. இந்தக் கருத்தைத் தான் இன்றைக்கு வலியுறுத்திச் சொல்லிக்கொள்ள விரும்பு கிறேன்.

### ஆரம்பத்தில் கலை இயல் படிப்புதான் தமிழில்

தமிழ் போதன மொழி ஆக வேண்டுமா என்பதைப்பற்றி எனக்கு ரொம்பவும் வேண்டியவர்களிடத்தில், நான் யாரிடத்திலே அதிகமாக மதிப்பு வைத்து இருக்கிறேனே அவர்களிடத்திலும் கூட, சில கருத்து வேறுபாடுகள் இருப்பதை உணருகின்றேன்.

[22nd February 1961

அதிலும் முக்கியமாக, இன்றைக்கு இந்தத் திட்டத்தைப்பற்றிக் குறை கூறுகின்றவர்கள் பலர், இந்தத் திட்டத்தை எந்த முறையில், எப்படி நிறைவேற்ற வந்திருக்கின்றோம் என்பதன் அடிப் படையைக்கூட மறந்துவிட்டு, இதிலே குறை கூறுவதை நேற்றுங் கூட நான் கேட்டேன். ஒரு பெரியவர் "எப்படி இன்ஜினீயரிங்கு படிப்பு அல்லது வைத்தியப் படிப்பு, விஞ்ஞானப் படிப்பு இதெல்லாம் நீங்கள் உடனடியாகத் தமிழில் சொல்லிக் கொடுக்கப் போகிறீர்கள்?" என்று என்னிடம் கேட்டார். "இப்போதைக்கு ஹுமானிட்டீஸ் அல்லது கலை இயல் பாடங்கள் என்ற பகுதியைத் தான் தமிழில் சொல்லிக் கொடுக்க ஆரம்பிக்கிறோம். விஞ்ஞான படிப்பு, வைத்தியப் படிப்பு, தொழில் படிப்பு இவை எல்லாம் தொடர்ந்து ஆங்கிலத்தில்தான் இன்னும் கொஞ்ச காலத்திற்கு இருந்து வரும். இந்தப் பகுதிப் படிப்பைப்பற்றி நான் வேறு விதமாக நினைத்தாலும்கூட மற்றவர்கள் கருதுவதையும் மனத்தில் வைத்துக்கொண்டு, அவர்களும் ஒப்புக்கொள்ள வேண்டும் என்கிற காரணத்தினாலேயே, எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய காலம் வரைக்கும் இதை ஒத்திப் போடலாம் என்கிற முறையிலே விஞ்ஞானம் முதலிய பாடங்களில் இப்பொழுது கை வைக்கவே இல்லை. இவை முன் இருப்பதைப் போலவேதான் தொடர்ந்து நடக்கப்போகின்றன. நாங்கள் இப்போது ஆரம்பம் செய்வது எல்லாம் இந்த ஹுமானிட்டீஸ் (கலை இயல் பாடங்கள்) என்று இருக்கக்கூடிய பகுதியில்தான் என்று அவர்களுக்குச் சொன்னேன். அவர் அதற்குமேல் ஒன்றும் பேசவில்லை. இதுமாதிரிப் பல தவறான கருத்துக்கள் பத்திரிகை களிலும், இன்னும் பல பெரியோர்களிடத்திலேயும் இருந்து வருகின்றன. இந்தத் திட்டத்திலே இருக்கக்கூடிய அடிப் படையான ஒரு அம்சத்தை மறந்துவிட்டோ அல்லது வேறு காரணத்தினாலோ இதிலே குறை கூறக்கூடியவர்களும் இருக் கிறார்கள். ஆகையினால்தான் இன்றைக்கு இதை முக்கியமாக விளக்க விரும்புகிறேன். தமிழிலேயே விஞ்ஞானத்தைச் சொல்லிக் கொடுக்க முடியாது என்கின்ற கருத்தினாலே அதை நான் ஒத்தி வைக்கவில்லை. இதனால் நமக்கு விஞ்ஞான வளர்ச்சி குறைந்து விடுமோ, தொழில் நுட்ப வளர்ச்சி குறைந்து விடுமோ என்று இன்றைக்குப் பல கருத்துக்கள் சொல்லப்படும்பொழுது, நாம் படிப்படியாகப் போக வேண்டும் என்ற காரணத்தினாலேயே, இன்றைக்கு இப்படி ஒரு படியில்தான் கால் எடுத்து வைத்து இருக்கிறோம் என்பதைத் திட்டவட்டமாக விளக்க வேண்டியது மிகவும் அவசியம்.

### ஆங்கிலம் புறக்கணிக்கப்பட்டுவிடும் என்பது தவறு

இன்னொரு கருத்தும் தெரிவிக்கப்படுகிறது. ஆங்கிலம் இல்லா மல் எப்படி உலகத்திலே ஏற்படக்கூடிய பல்வேறு முன்னேற்றங் களிலேயும் பங்கு கொள்ள முடியும்? தமிழ் மொழி அறிவு மட்டும் இருந்து இன்றைக்கு உலக முன்னேற்றங்களில் பங்கு கொள்வது என்பது முடியாத காரியம். ஆகையினாலே நாம் எடுத்துக்கொண்டு இருக்கக்கூடிய இந்த முயற்சி ஒரு சமயம் நமக்குப் பாதகம்

22nd February 1961]

விளைவிக்குமோ என்பதே அந்தக் கருத்து. அதற்கும் இந்த இடத்திலேயே நாம் நல்ல முறைகளிலே பரிசீலனை செய்து பார்த்து பதில் கூறவேண்டும். இன்றைக்குப் பாடம் தமிழிலேயே சொல்லிக்கொடுக்க வேண்டும் என்று நாம் சொல்வது ஆங்கில மொழியைக் கற்றுக் கொள்ளக்கூடாது என்ற அடிப்படையில் அல்ல. அந்த அடிப்படையில் அல்ல நாம் இந்தத் திட்டத்தை ஏற்றுக்கொண்டு இருப்பது. ஆங்கில மொழியை அல்லது இன்னொரு ஐரோப்பிய மொழியை நம்முடைய இளைஞர்கள் எல்லோரும் கட்டாயம் கற்றாக வேண்டும். அப்படிக் கற்றுக் கொண்டு, அதன்மூலமாக ஆங்கில நூல்களை எல்லாம் படிப்பதற்கான ஒரு முறையை நாம் வகுக்க வேண்டும் என்கிற அடிப்படையில்தான் இன்றைக்கு ஆங்கிலம் முன்பு சொல்லிக் கொடுத்ததைவிட இன்னும் கொஞ்சம் நல்ல முறையிலே பள்ளிக்கூடங்களிலே சொல்லிக் கொடுக்கப்படவேண்டும் என்று முடிவு செய்திருக்கிறோம். ஆகையினாலே தமிழிலேயே பாடம் படிக்கும்பொழுது ஆங்கில மொழி அவர்களுக்குத் தெரியாத ஒரு நிலைமையை ஏற்படுத்துவது அல்ல, இந்தத் திட்டத்தினுடைய நோக்கம். ஆங்கிலத்தையும் அவர்களுக்கு நல்ல முறையிலே சொல்லிக் கொடுக்க வேண்டும் என்பதுதான், இன்றைக்கு இருக்கக்கூடியதும், நாம் ஏற்றுக்கொண்டு இருக்கக் கூடியதுமான இந்தத் திட்டத்தின் நோக்கம்.

அதிலே சொல்லக்கூடிய இன்னொரு கருத்து என்ன என்று சொன்னால் பாடம் எல்லாம் ஆங்கிலத்திலே சொல்லிக்கொடுக்காமல் எப்படி ஆங்கில மொழியைக் கற்க முடியும் என்று சிலர் நினைக்கிறார்கள். அதற்குக் காரணம், இந்த 100, 150 வருடங்களாக நம்மிடத்திலே ஏற்பட்டு இருக்கக்கூடிய ஒரு பழக்கம். பல வருடங்களாக நாம் எல்லாப் பாடங்களையும் ஆங்கிலத்திலே கற்றுக் கொண்டு வந்துள்ளோம். எல்லாப் பாடங்களையும் ஆங்கிலத்தில் படிக்கும்பொழுதுதான் ஆங்கில மொழியைக் கற்றுக்கொள்ள முடியும் என்கின்ற கருத்து, அந்தக் காரணத்தினால்தான் வலியுறுத்தப்படுகின்றது. இன்றைக்கு உலகத்தில் இருக்கக்கூடிய மற்ற நாடுகளிலே எல்லாம் ஆங்கிலத்தைத்தான் ஐரோப்பிய மொழிகளில் ஒன்றாக முதலில் கற்றுக்கொண்டு வருகிறார்கள் என்பதில் சந்தேகமே கிடையாது. சமீபத்திலே, ரஷ்யாவில் சைபீரியா பகுதியிலே இருந்து ஒரு ஆசிரியர் குழு சென்னைக்கு வந்திருந்தது. அவர்களிடத்திலே நான் பேசிக்கொண்டு இருக்கக் கூடிய ஒரு வாய்ப்புக் கிடைத்தது.

### ரஷ்ய நாட்டில் எப்படி நடக்கிறது ?

அவர்களிடத்தில், "நீங்கள் உங்கள் நாட்டிலே எத்தனை மொழிகளை உங்கள் குழந்தைகளுக்குச் சொல்லிக்கொடுக்கிறீர்கள் ?" என்று கேட்டேன். "அந்தந்தப் பிராந்திய மொழியைக் கட்டாயம் முதலில் இருந்தே சொல்லிக் கொடுக்கிறோம்" என்று அவர்கள் சொன்னார்கள். "அதேமாதிரி தேசிய மொழியாகிய ரஷ்ய மொழியையும் கற்றுக்கொடுக்கின்றோம். இத்துடன் நின்று விடாமல், ஐரோப்பிய மொழிகளிலே, உலக மொழிகளிலே

[22nd February 1961]

ஒன்றை 3-வது மொழியாகக் கட்டாயம் கற்றுக வேண்டுமென்று ஏற்பாடு செய்து இருக்கிறோம்" என்றும் சொன்னார்கள். "பொதுவாக எதை அதிகமாக இந்த 3-வது மொழியாக கற்றுக்கொள்கிறார்கள்" என்று நான் கேட்டேன். "இதற்கு முன்பு எல்லாம் ஜெர்மன் மொழியை அதிகமாகப் படித்தார்கள்; பிரஞ்சு அதிகமாகப் படித்தார்கள். ஆனால் சமீப காலத்தில் இந்த 4, 5 வருடத்திற்குள்ளாக ஆங்கிலத்திற்கு ஒரு புதிய சிறப்பு மதிப்பு ஏற்பட்டு இருக்கிறது. பெரும்பான்மையான குழந்தைகள் ஆங்கிலம்தான் எடுத்துப் படிக்கிறார்கள்" என்று சொன்னார்கள். இதேமாதிரித்தான், இன்றைக்கு எந்த நாட்டிலே போய்ப் பார்த்தாலும்கூட, 3-வது அல்லது 4-வது மொழியாக ஐரோப்பிய மொழி ஒன்றைக் கற்க வேண்டுமென்கிற ஒரு ஏற்பாடு செய்து இருக்கிறார்கள். அப்பொழுது இந்த மொழி, போதனா மொழியாக இருந்துதான் கற்றுக்கொள்ளப்பட வேண்டும் என்றும் சொன்னால், ரஷ்யாவில் ஆங்கிலத்தின் மூலமாகப் பாடம் கற்றுக்கொள்வதன்மூலம்தான் அவர்கள் ஆங்கிலம் கற்றுக்கொள்ள முடியும் என்று தீர்வு காண வேண்டும். அதே மாதிரியாக, ஜப்பானிலும் இன்றைக்கு ஆங்கிலம் கற்கிறார்கள் என்று சொன்னால் ஆங்கிலத்தின் மூலமாக எல்லாப் பாடங்களும் சொல்லிக் கொடுத்துத்தான் ஆங்கிலத்தைக் கற்றுக் கொள்கிறார்கள் என்ற முடிவுக்கு வரவேண்டியதாக இருக்கும். இது தவறான கொள்கையாகும்; உண்மைக்கும் விரோதமாகும். உலகத்திலே இருக்கக்கூடிய எந்த நாடுகளை எடுத்துக்கொண்டாலும்கூட, அவரவர்களுடைய மொழியிலே பாடம் சொல்லிக் கொடுக்கும்பொழுது ஆங்கில மொழியையும் கூடவே கற்றுக்கொள்ள முடியும் என்று ஏற்படுகிறது. நமக்கு ஆங்கிலம்தான் முக்கியமாக இருக்கிறது. ஆங்கிலத்தைப் போதனா மொழியாக இல்லாமலேயே கற்றுக்கொள்ள முடியும் என்பதை, அவர்கள் நிரூபித்துக் காண்பித்திருக்கிறார்கள். நம்முடைய குழந்தைகளுக்கு அறிவுக் குறைவா, அல்லது மொழி கற்றுக்கொள்வதிலே நமக்குத் திறமை இல்லையா என்பதுதான் நான் கேட்க விரும்புவது.

**தலைமுறை தலைமுறையாக ஆங்கிலம் இருக்கமுடியாது**

உலகத்திலே மற்றையப் பகுதிகளில் ஆங்கிலத்தைப் பாட மொழியாக இல்லாமலேயே கற்றுக்கொள்ளக்கூடிய ஒரு நிலைமை இருக்கும்பொழுது நம்முடைய ஊரில் மட்டும், நம்முடைய குழந்தைகளுக்கு அது முடியாது என்று சொல்லுவார்களேயானால் அது நாம் ஏற்றுக்கொள்ளக்கூடிய ஒரு கருத்துத்தானா என்பதைப் பற்றி எல்லோரும் கொஞ்சம் யோசனை செய்து பார்க்க வேண்டும். அன்னிய மொழி ஒன்றைக் கற்றுக்கொள்வதில் சங்கடங்கள் பல இருக்கின்றன என்பதை நான் உணருகின்றேன். அதற்கு, அந்த முறைகளைத் திருத்தி அமைத்து, அந்த மொழியைக் கற்பதற்கு நாம் ஏற்பாடு செய்ய வேண்டுமேயொழிய ஆங்கிலம் தெரியவேண்டும் என்பதற்காகத் தொடர்ந்து தலைமுறை தலைமுறையாக, இதுதான் போதனா மொழியாக இருக்க வேண்டும் என்று சொன்னால் அது நாம் ஏற்றுக்கொள்ளக்கூடிய கருத்தன்று.

22nd February 1961]

எப்போதாவது ஒரு நாளைக்கு தமிழ் மொழியை போதன மொழியாகக் கொண்டு வரலாம் என்று முடிவு செய்து ஒத்திப் போட்டால் ஏதோ கருத்தளவுக்கு, மக்களுக்கு சொல்கின்ற அளவுக்கு, ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கின்றதேயொழிய, அது நடைமுறைக்கு வரக்கூடிய காலம் என்றைக்குமே வராமல் போய்விடும் என்ற நிலைமைதான் ஏற்படும்.

**தமிழ் போதன மொழி—ஆங்கிலத் தர உயர்வு**

ஆகையினால்தான், இன்றைக்கு ஆங்கிலத்தை நல்ல முறையிலே கற்பிப்பதற்கு என்ன என்ன திட்டங்களை நாம் நிறைவேற்ற வேண்டும் என்பதை யோசித்து முடிவு செய்திருக்கிறோம். இங்கு வருவதற்குமுன், இன்னொரு நிகழ்ச்சியிலே நான் கலந்து கொண்டேன். நம்முடைய பள்ளிக்கூடங்களில் 6-வது வகுப்பில் இருந்து ஆங்கிலம் சொல்லிக் கொடுப்பதற்குப் பதிலாக, 5-வது வகுப்பில் இருந்தே சொல்லிக் கொடுக்கவேண்டும் என்று முன்னரே முடிவு செய்து இருக்கின்றோம். அதே சமயத்தில், நல்ல முறையிலேயும் இந்த ஆங்கில மொழியைக் குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்பதற்காக நம்முடைய ராஜ்யத்திலே இருக்கக் கூடிய எல்லா ஆசிரியர்களுக்கும், ஆரம்ப பள்ளிக்கூட ஆசிரியர்களுக்கும், அதாவது குறைந்தது 40 ஆயிரம் செகண்டரி கிரேட் ஆசிரியர்களுக்கும், அவர்கள் எங்குப் பணியாற்றுவதாக இருந்தாலும், நல்ல முறையில் ஆங்கிலத்தைச் சொல்லிக் கொடுப் பதற்கு ஒரு பயிற்சித் திட்டத்தை வகுத்து 6 மாதங்களுக்கு முன்னரே ஆரம்பம் செய்து, இன்றைக்கு அந்தத் திட்டத்திலே ஒரு பகுதி, "மணீஸ் உயர் நிலைப் பள்ளியிலே" நடைபெற்று வருகின்றது. இன்றைக்கு நான் அங்கே சொன்னேன்: "நாம் போட்டு இருக்கக்கூடிய திட்டம் இரண்டு தண்டவாளங்கள் போலாகும். ஒரு தண்டவாளம் தமிழ் போதனமொழி. மற்றொன்று ஆங்கிலத் தர உயர்வு. ஒரு தண்டவாளம் இல்லை என்று சொன்னால் இன்னொரு தண்டவாளத்தை வைத்துக் கொண்டு இந்தத் திட்டத்தை நிறைவேற்ற முடியாது. எனவே, ஆங்கிலத் தையும் நன்றாகக் கற்றுக்கொள்ள ஏற்பாடு செய்ய வேண்டும்; அதே சமயத்திலே, தமிழ்மூலமாகப் பாடம் சொல்லிக் கொடுப் பதற்கும் ஏற்பாடு செய்ய வேண்டும். இன்றைக்கு, அந்தத் திட்ட அடிப்படையில்தான், இந்த இரண்டிலேயும், ஒரே சமயத்திலே பல முயற்சிகள் செய்யப்பட்டு, ஆங்கிலத்தை நன்றாகக் கற்பிப் பதற்கும் அதே சமயத்தில் தமிழ்மூலமாகப் பாடம் சொல்லிக் கொடுப்பதற்கும், நாம் முயற்சி செய்து வருகின்றோம்."

**கருத்து வேற்றுமைகளைக் களைந்தெறியுங்கள்**

இதிலே வெற்றி காண வேண்டும் என்று சொன்னால், இதில் ஒரு குழப்பமான நிலைமை, கருத்து வேற்றுமைகள் இருக்கக்கூடிய ஒரு நிலைமை ஏற்படுமேயானால் எந்த அளவிற்கு இதில் தடைகள் ஏற்படும் என்பதிலும் சந்தேகம் இல்லை; தாமதம் ஏற்படும் என்பதிலும் சந்தேகம் இல்லை. இதை நிறைவேற்ற வேண்டும், எப்படியும் நிறைவேற்றித் தீர வேண்டும் என்ற நிலைமை ஏற்படும்

[22nd February 1961

பொழுது கருத்து வேற்றுமை இருக்கின்றவர்கள் தங்களுடைய கருத்துத்தான் பெரிது என்கிற ஒரு நிலைமையை விட்டு விட்டு, இந்த நற்பணியிலே எல்லோரும் பங்கு கொள்வதற்கான ஒரு சூழ்நிலையை ஏற்படுத்த வேண்டும் என்று மிகவும் பணிவுடன் இந் நந்நாளிலே நான் கேட்டுக் கொள்ள விரும்புகிறேன். அந்த முறையில்தான், அதிலும் கல்வித் துறையிலே, நாம் முன்னேற்றம் காணமுடியும். ஸ்ரீ மீனாட்சி சுந்தரனார் அவர்கள் பேசும் பொழுது, தமிழிலே பாடம் சொல்லிக் கொடுக்க முடியுமா என்பதைப் பற்றி ஆசிரியர்களுடைய கருத்தைக் கேட்ட பொழுது 100-க்கு 95 பேர் சொல்லிக் கொடுக்கலாம்; நாங்களும் சொல்லிக் கொடுப்பதற்குத் தயாராக இருக்கின்றோம் என்கின்ற கருத்தைத் தெரிவித்தார்கள் என்று கூறினார்கள். இதற்கு மேலே கல்வித் துறையிலே ஆலோசனை சொல்லக்கூடியவர்கள் யார் அதிகம் திறன் வாய்ந்தவர்கள் என்று எனக்குத் தெரியவில்லை!

### அரசியல் கருத்தே இங்கு இல்லை

ஏதோ கல்வி மந்திரி அரசியல் அடிப்படையிலே இந்தத் திட்டத்தை நிறைவேற்ற முயலுகிறார் என்று சிலர் சொல்லுகிறார்கள். அரசியல் கட்சிகள் ஒரு பக்கம்; அது இருக்கட்டும். அரசியல் கட்சிகள் பற்றி நான் சட்ட சபையில் பேசிக் கொள்கிறேன். இங்கே சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. ஆனால் அரசியல் கட்சி நோக்கத்துடனே இந்தத் திட்டம் கொண்டு வரப் படுகிறது என்று கல்வித்துறையிலே பணியாற்றுகிறவர்கள் நினைப் பார்களேயானால், தயவு செய்து அந்தக் கருத்தைக் கொஞ்சம் மாற்றிக் கொள்ள வேண்டும் என்பதற்காகத்தான் இதைச் சொல்ல விரும்புகின்றேன். இது வரையிலும் நாம் ஏற்படுத்திய எந்தக் குழுவாய் இருந்தாலும் சரி, அந்தக் குழுக்கள் எல்லாம் பரிசீலனை செய்து பார்த்துக் கடைசியாக அவர்கள் எவ்வளவு சீக்கிரம் இந்தப் போதனா மொழியை மாற்றுகின்றோமோ அவ்வளவு சீக்கிரம் நம்முடைய கல்வித் தரம் உயரும் என்பதை வலியுறுத்திச் சொல்லியிருக்கிறார்கள். குழுவிலே கூடி அவர்கள் சிபார்சு செய்தது அச்சிட்டு வரும் பொழுது ஒருவிதமாக வருகின்றது. ஆனாலும் துர் அதிருஷ்டவசமாக அக்குழுவில் இருந்தவர்கள் தனிப்பட்ட முறையில் பேசும்பொழுது அதே கருத்து வேறுவிதமாகப் போய்விடுகின்றது என்பதை பார்க்கும் பொழுதுதான், அதில் எதை எடுத்துக் கொள்கிறது என்று சந்தேகம் ஏற்படுகிறது. தனியார் சொல்வதை எடுத்துக் கொள்கிறதா? இல்லை, 4, 5 பேராக கூட்டாகச் சேர்ந்து அவர்களுடைய கருத்துக்களை எல்லாம் ஆராய்ந்து பார்த்து இதுதான் எங்களுடைய தெளிந்த கருத்துக்கள் என்று அச்சிட்டு நமக்கு வழங்கக்கூடிய அறிக்கைகளை எடுத்துக் கொள்வதா? என்பதுதான் எனக்குப் புரியவில்லை.

### கல்லூரிப் படிப்புச் சீரமைப்பு முறை

இன்றைக்குக் கல்லூரிப் படிப்பு எந்த முறையிலே மாற்றி அமைக்கப்பட்டு இருக்கின்றது? 3 வருடப்படிப்பு, பி.யு.சி. படிப்பு, ஹயர் செகண்டரி கல்வி ஆகிய எல்லாம் எந்த அடிப்படையில்

22nd February 1961]

வைத்திருக்கிறது என்றால் நம்முடைய யூனிவர்சிடி எடுகேஷன் கமிஷன் சொல்லியபடியே ஆகும். நம்முடைய மதிப்பிற்குரிய வரும் உலக மதிப்பைப் பெற்று இருக்கக்கூடியவருமான திரு. ராதாகிருஷ்ணன் அவர்களைத் தலைவராகவும் நம்மவர்களில் உலகப் புகழ் பெற்று இருக்கக்கூடிய திரு. லட்சுமணசாமி முதலியார் அவர்களை அங்கத்தினராகவும் கொண்டு இன்னும் பல பெரியவர்கள், கல்வித் துறையிலே பெரியவர்கள் (மற்றத் துறைகளிலேயும் அவர்கள் பெரியவர்களாய் இருக்கலாம்) எல்லோரும் ஒன்றாகக் கூடி, அவர்கள் அறிக்கையை சமர்ப்பித்து, இந்த அடிப்படையில்தான் நம்முடைய கல்லூரிப் படிப்புகளை மாற்றி அமைக்கவேண்டும், சர்வகலாசாலைகளிலும் இவ்வாறுதான் மாற்றி அமைக்க வேண்டும், என்று திட்டவட்டமாகக் குறிப்பிட்டு இருக்கின்றார்கள். அதிலே சொல்லப்பட்டுள்ள கருத்தை நான் எடுத்து சமீபத்திலே வெளியிட்ட வெள்ளை அறிக்கையில் குறிப்பிட்டு இருப்பதைப் பார்த்து இருப்பீர்கள் என்று நம்புகிறேன். அவர்கள் திட்டவட்டமாகச் சொல்லி இருப்பது தமிழ் வெறியினால் அல்லது, தமிழ் அன்பினால் அல்ல, அல்லது வேறு மொழிகளின்மேல் உள்ள வெறியினால் அல்ல, அன்பினால் அல்ல. கல்வித் தரம் உயர வேண்டும் என்று சொன்னால், தாய்மொழியின் மூலமாகத்தான் குழந்தைகள் படித்தாக வேண்டும், கல்லூரிகளிலேயும் படித்தாக வேண்டும் என்கின்ற ஒரு கருத்தைத்தான் திட்டவட்டமாகச் சொல்லி இருக்கிறார்கள். அதே மாதிரி ஏற்படுத்தி இருக்கக்கூடிய எந்த யூனிவர்சிடி கமிட்டிகளாக இருந்தாலும் சரி, எந்த வல்லுனர்கள் அடங்கிய குழுவாக இருந்தாலும் சரி, நம்முடைய மாணவர்களிடையே சிந்தனை சக்தி வளருவதற்கு ஒரு பெரும் தடையாக அன்னிய மொழி இருக்கிறது என்பதைப்பற்றி அவர்கள் எல்லோரும் ஒப்புக்கொண்டு, சொல்லி இருக்கிறார்கள்.

### நல்லதொரு சமுதாயப்பணி

அந்த அடிப்படையிலேதான் எல்லாத் துறைகளிலும் உடனடியாக அதை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று சொல்லக் கூடிய கருத்து ஒரு புறம் இருக்க, ஒரு படி நாம் எடுத்து வைப்போம் என்கின்ற முறையிலே இன்றைக்கு இந்த ஆரம்பம் செய்யப்பட்டு இருக்கின்றது. என்னைப் பொறுத்த வரையிலே இதிலே எந்த விதமான குழப்பமும் கிடையாது. எனக்குத் தெளிவாக தோன்றுவது இது. இந்த ஆரம்பம் நம்முடைய சமுதாயத்திலேயே ஒரு புரட்சிகரமான மாறுதலை ஏற்படுத்தப் போகின்றது என்பது என்னுடைய தாழ்மையான கருத்து. அப்பேர்ப்பட்ட ஒரு காரியத்தைத்தான் நாம் இன்றைக்கு ஆரம்பித்து வைக்கிறோம். இங்குக் கல்லூரித் தலைவர் அவர்கள் பேசும்பொழுது "மந்திரிக்கு அழகு தந்திரம் சொல்லுதல்" என்று சொல்லிப் பிறகு அதை மாற்றி மந்திரம் என்று சொன்னார்கள். பழமொழியோ வேறு விதம். "மந்திரிக்கு அழகு வரும் பொருள் உரைத்தல்" என்பதே அது. ஆனால் இந்த வரும் பொருள் உரைத்தல் இருக்கின்றதே, கொஞ்சம் கஷ்டமான காரியம். இதுதான் வரப் போகின்றது என்று சொன்னால், அது இல்லை என்று யாரேனும் மறுத்துச்

